# திருக்குற்றாலம்



தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
சென்னை – 600 008
2016, திருவள்ளுவர் ஆண்டு – 2047

# திருக்குற்றாலம்

பதிப்பாசிரியர்
முனைவர் **தா. கார்த்திகேயன்,** இஆப.,
ஆணையர்

ஆசிரியர்
**கே. மதியழகன்**

வெளியீடு
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
சென்னை-600008
2016, திருவள்ளுவர் ஆண்டு-2047

# நூல் விவரம்

முதற்பதிப்பு : 2016

வெளியீடு எண் : 276

நூல் தலைப்பு : திருக்குற்றாலம்

பதிப்புரிமை : தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை

பதிப்பாசிரியர் : முனைவர் தா. கார்த்திகேயன், இஆப., ஆணையர்

ஆசிரியர் : கே. மதியழகன்

மொழி : தமிழ்

எழுத்து : 14 புள்ளிகள்

பிரதிகள் : 1000

தாள் : 80 Gsm

பக்கங்கள் : 152

விலை : ரூ. 58.00

அச்சிட்டோர் : தரமணி மகளிர் கூட்டுறவு அச்சகம், 46, பீட்டர்ஸ் ரோடு, இராயப்பேட்டை, சென்னை- 14.

## பொருளடக்கம்



முனைவர் **தா. கார்த்திகேயன்,** இ.ஆ.ப.,
ஆணையர்

தொல்லியல் துறை
தமிழ் வளர்ச்சி வளாகம்
தமிழ்ச் சாலை
சென்னை - 600 008

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, தமிழகத்திலுள்ள கல்வெட்டுகள், தொல்லியல், அகழாய்வு, தமிழகக் கோயில்களின் கட்டடம், கலை, சிற்பம், ஓவியம், செப்புத் திருமேனிகள் ஆகியவற்றைப் பற்றி விரிவாக மாணவர்கள் கற்கவேண்டி 1973-74 ஆம் ஆண்டு கல்வெட்டுப் பயிற்சி நிறுவனம் ஒன்றினை நிறுவியது. இக்கல்வெட்டுப் பயிற்சி நிறுவனம் ஆண்டுதோறும் முதுகலைப் பட்டம் பெற்ற எட்டு மாணவர்களுக்கு 'கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்' என்னும் முதுநிலைப் பட்டயம் ஒன்றினை வழங்குகிறது. இதுவரை இப்பயிற்சி நிறுவனத்தில் 219 மாணவர்கள் பயின்றுள்ளனர்.

இம்மாணவர்களது பயிற்சிக் காலத்தில் ஒரு குறிப்பிட்ட கோயிலைத் தேர்வு செய்து அவ்வூர் மற்றும் அவ்வூரில் அமைந்துள்ள கோயில்களைப் பற்றி விரிவாக ஆய்வு செய்து ஆய்வேடு ஒன்றினைச் சமர்ப்பிக்கின்றனர். இவ்வாய்வேடுகளில் இதுவரை 30 ஆய்வேடுகள் நூல் வடிவம் பெற்றுள்ளன.

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை கல்வெட்டுப் பயிற்சி நிறுவனத்தில் 1975-76-ஆம் ஆண்டு பயின்ற திரு. கே. மதியழகன் அவர்கள் எழுதிய “திருக்குற்றாலம்” என்னும்

ஆய்வேடு தற்போது 31-ஆவது நூலாக வெளிவருகிறது. இந்நூல் தமிழ்நாட்டில் புகழ்பெற்ற சுற்றுலாத் தலமாக விளங்கும் திருக்குற்றாலத்தில் அமைந்துள்ள அருள்மிகு திருக்குற்றாலநாதர் திருக்கோயிலின் கட்டடக்கலை, சிற்பம் ஆகியவை பற்றியும், அக்கோயில் கல்வெட்டுகளின் மூலம் அக்கால அரசியல், சமுதாய பொருளாதாரச் செய்திகளையும் விரிவாக விளக்குகிறது.

"திருக்குற்றாலம்" என்னும் இந்நூல் பதிப்பிக்கும் பணியினை மேற்கொண்ட இத்துறை தொல்லியல் துணைக் கண்காணிப்பாளர் முனைவர் சீ. வசந்தி, உதவி கண்காணிப்பு கல்வெட்டாய்வாளர் திரு. இரா. சிவானந்தம் மற்றும் கல்வெட்டாய்வாளர் திரு. ஜெ. பாஸ்கர் ஆகியோருக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள்.

இந்நூலினை நல்ல முறையில் கணினியில் தட்டச்சு செய்து அட்டைப்படம் வடிவமைத்த அச்சுக்கோர்ப்பாளர் திரு. மு. சக்திவேல் மற்றும் அச்சுப்பிழைத்திருத்தம் செய்த திருமதி. ச. சரஸ்வதி ஆகியோருக்கும் எனது பாராட்டுகள்.

**"தமிழ்நாடு புதுமை முயற்சிகள் திட்டத்தின்"** கீழ் 2015-2016-ஆம் ஆண்டில் பத்து மாணவர்களின் ஆய்வேடுகள் நூலாக்கம் செய்வதற்கு நிதியுதவி நல்கி சிறப்பிக்கும் தமிழ்நாடு அரசுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வரலாற்று மாணவர்களுக்கும், தொல்லியல் மாணவர்களுக்கும், தொல்லியல் ஆர்வலர்களுக்கும் மற்றும் பொதுமக்களுக்கும் பயனுடையதாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

ஆணையர்

# முன்னுரை

இறையுணர்வின் விளைவிற்கு ஏராளமான ஏதுக்களை எடுத்தியம்பலாம். இயற்கையின் சீற்றங்களால் ஏற்பட்ட மனிதத்தின் அச்ச உணர்வையே அடிப்படை ஏதாக்கலாம். இயற்கையின் எழிலைத் துய்க்கும் நெஞ்சில் ஏற்பட்ட வியப்புணர்வும் இறையுணர்வாய் மாறிற்று என எண்ணலாம். இறந்த மனிதரே இறைவராக்கப்பட்டச் சூழலும் இறைவணக்க வரலாற்றில் இணைந்ததே. இயல்பான மனிதவுணர்விலிருந்து மாறுபட்டு அரியவை செய்த பெரியரும், திறன் காட்டி பட்ட மறவரும் இப்பகுப்பில் அடங்குவர்.

இதுபற்றி ஆழ்ந்து சிந்தித்தால் விலங்குணர்விலிருந்து விடுபட நடைபெற்ற மனித முயற்சிகளை உய்த்துணரலாம். இந்த முயற்சியில் தனிமனிதத் தலைமைச் செல்வாக்காலும், பல்வித குழுக்களின் மனவேறுபாடுகளாலும் பல்வேறு சமயங்கள் பிறப்பெடுத்த மனிதத்தைப் பண்படுத்த முயன்றமையையும் உணரலாம்.

சமயங்கள் பிறப்பெடுத்து வளர்ந்த இலக்கியவுணர்வு மிக்க இலக்கியர் பக்திப் பனுவல்களைப் பாடிக் களித்தனர். இறைவனை தத்துவச் சிந்தனையோடு கற்பனை செய்தனர். பக்திப் பனுவல்களில் ஈடுபட்ட சிற்பியர் இலக்கியரின் தத்துவச் சிந்தனைகளோடு கற்பித்த இறையுருக்களை நெஞ்சில் நிறுத்தி கல்லில் படைக்க முற்பட்டனர். ஓவியர் ஓவியங்களாக்க முற்பட்டனர்.

இக்கலைச்செல்வங்களை பக்தியுணர்வோடு வணங்குவது மட்டுமே நமது பணியல்ல. இலக்கியக்கலைக்குரிய திறனாய்வாளர் களைப் போல் கோயிற்கலைக்குரிய திறனாய்வாளிகள் நாம். நமது திறனாய்வால் வரலாற்றுத் தெளிவும், மக்கள் வாழ்வியல் வளமும், சமுதாய அமைப்பியல் முறைமையும், பண்பாட்டுச் சிறப்பியல்பும், கலைகளின் சிறப்பியல்பும் விளக்கமுறுகின்றன.

கோயிற் கலைகளைக் காப்பதோடு அவற்றின் சிறப்பியல்புகளை உலகிற்கு எடுத்தளிக்கும் நிறுவனமே தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை. இத்துறைக்குக் கிடைத்துள்ள தலைமைச் சிறப்பே இந்நிறுவனத்தின் தனித்தன்மை.

இலக்கியத் திறனிகள் இலக்கியனின் மனவுணர்வுகளை உய்த்துணரும் வல்லமையும், இலக்கியம் தோன்றிய காலச்சூழல் பற்றிய வரலாற்றுத் தெளிவும் பெற்றிருக்கவேண்டும். அப்போது தான் ஓர் இலக்கியத்தின் தன்மையையும், சிறப்பியல்புகளையும் அறிய முடியுமென்று இலக்கணமியம்புவர் அறிஞர்கள்.

இவ்விலக்கணத்திற்கேற்பவே — பழங்காலச் சிற்பியரும், ஓவியரும் தம் நெஞ்சில் எதை நினைந்து தம் கலைப் படைப்புகளைப் படைத்தனரோ அதனை உய்த்துணரும் வல்லமையும், கலைநளினங்களை அணுஅணுவாய்த் துய்க்கும் அரிய கலைவிழிகளையும், இலக்கியப் புலமையும், வரலாற்றுத் தெளிவையும், உணர்ந்ததைத் தெளிவுற உணர்த்தும் அரிய அறிவும் பெற்ற ஒருவர் கிடைக்க பல்வேறு காலகட்டங்களைச் சார்ந்த உளிப்புலவர்களும், தூரிகைக் கவிஞர்களும் என்ன தவம் செய்தனரோ?

இத்தகைய கலைச்செல்வரின் கீழ் மாணவர்களாய் இருந்து தமிழ்நிலமெங்குமுள்ள கலைச்செல்வங்களைக் கண்டு சிறப்பியல்புகளைக் கற்ற எழுவருள் யானும் ஒருவன். பயிற்சியின் இறுதியில் ஒரு தனிக்கோயிலை எடுத்துத் திறனாய வேண்டுமென்ற முறையில் சீர்மலி இயக்குநர் அவர்கள் அளித்த ஆலயமே 'அருள்மிகு குற்றாலநாத சுவாமிகள் கோயில்'.

இக்கோயில் பற்றி திறனித்து, இதன் சிறப்பியல்புகளை இயன்ற அளவு எடுத்துணர்த்த முயன்றுள்ளேன் என்பதைப் பணிவன்போடு தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆசிரியர்

# இயற்கை வளம்

"சோலைகள், ஆறுகள், மலைகள், ஊற்றுகள், பூங்காக்கள் நிறைந்த நகரங்கள் ஆகிய இடங்களில் தேவதைகள் உறைகிறார்கள்"

"வனோ பாந்த நதீ சைல நிர்ஜ ரோ பாந்த பூமிஷு

ரமந்தே தேவதா நித்யம் புரேஷு த்யான வத்ஸு ச:"

என்ற மிகப்பழைமையான நூல்களில் ஒன்றான பிருகத் சம்ஹிதை கோயில்களைப்பற்றிக் கூறும் கருத்தின் மொழிப்பெயர்ப்பே மேற்சுட்டியது. இத்தகைய சிறப்பியல்புகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்டதே திருக்குற்றாலம்.

இயற்கைத் தச்சர்கள் எழுப்பிய ஏற்றமிகு கோபுரங்களாய் தெற்கிலிருந்து தொடரும் மலைமுகடுகள் ஒரு முக்கால் வட்ட வடிவில் வடகிழக்கு வரை நீள்கின்றன. பசியவண்ணச் சுதை வேலைப்பாடுகளாய் அமைந்த மரங்களினூடே வெண்மேகங்களின் ஊர்வலங்கள்.. சினந்தணிந்த சான்றோராய் அவையுதிர்க்கும் மல்லிகைச் சாரல்கள்.. நெஞ்சைப் பூவாக்கி.. நினைவுகளைத் தேனாக்கி.. சிந்தனையை வண்டாக்கும் கவிதைக் காட்சிகள்.

இயற்கைச் செழுமைக்கு இன்றியமையாதவை நீரும் நிழலுமே. தமிழ் நிலத்தில் கடல்நீர் கவினும், ஆற்றுநீர் அழகும் அதிகம்தான். ஆயினும் அருவிநீர் அழகு இங்குதானே! ஒரே அருவியா.. ஏறக்குறைய ஐந்தாறு அருவிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றிலிருந்தும் மாறுபட்ட அமைப்பில் இன்பமூட்ட வல்லவை.

எங்கு நோக்கினும் மரங்களே. மரங்களின் நிழல்கள் சோலைகள். ஊரைச் சுற்றிலும் பசிய வயல்கள். இயற்கையின் மலைக் கோபுரங்கள் இருக்க, செயற்கைக் கோபுரங்கள் எதற்கு என்ற எண்ணத்தில்தான் உயர்ந்த கோபுரங்களோ, விமானமோ அமைக்காமல் நிறைய மண்டபங்களாய் கட்டிவிட்டார்கள் போலும்!

குற்றாலத்தைப் பற்றி இரு தொடரில் கூறவேண்டுமெனில் 'குற்றாலம் — அது இயற்கையன்னையின் இனிய மருந்தகம்'. 'குற்றாலம் — அது மனிதப் பறவைகளின் மாண்புறு வேடந்தாங்கல்' என்ற இரு தொடர்களே ஏற்புடையதாக இருக்கும்.

பாண்டிய நாட்டில் இறைவன் உறைவிடங்களாகவுள்ள கோயில்கள் பலவாக இருந்தாலும், அவற்றுள் நால்வரால் பாடப்பட்ட பெருமை சான்ற தலங்கள் பதினான்கில் ஒன்று திருக்குற்றாலம்.

## ஊர் அமைவிடம்

குற்றாலம் திருநெல்வேலி மாவட்டம் தென்காசி வட்டத்தில் தென்காசி ஊருக்குத் தென்மேற்கே மூன்றரை கல் தொலைவில் மேற்குத்தொடர்ச்சி மலையின் அடியில் அமைந்துள்ளது.

குற்றாலத்திற்கு வடக்கே காசிமேஜர்புரம், வள்ளியூர், இலஞ்சி, வல்லம், செங்கோட்டை முதலிய ஊர்களும், கிழக்கே குடியிருப்பு, நன்னகரம், மேலகரம், சிந்தாமணி, தென்காசி, பழைய குற்றாலம், மத்தளம் பாறை, ஆயிரம்பேரி, பாட்டப்பத்து முதலிய ஊர்களும் அமைந்துள்ளன.

எம்மருங்கும் சோலைகளும் செந்நெற்கழனிகளும், நந்தவனங்களும், நீர்நிலைகளும், மண்டபங்களும், மலையின் நீல நிறச் சாயலும் காண்பவர் நெஞ்சையள்ளும். இவ்வழகு நிரம்பிய இடத்தில் பார்க்கப் பார்க்க வசீகரிக்கும் அழகின் இருப்பிடமாய்த் திகழ்வது திருக்குற்றாலம்.



## மலைகள்

குற்றாலமலை கடல் மட்டத்திற்கு மேல் 550 அடி உயரத்திலுள்ளது. இங்குள்ள மேற்குத்தொடர்ச்சி மலை மேற்கே 10 மைல் தூரத்திலுள்ள ஆரியன்காவுக் கணவாயில் இருந்து உயர்ந்து கொண்டே வந்து 3 கி.மீ. அருகில் உள்ள ஐந்தருவி முதல் 5000 அடி வளர்ந்து குற்றாலத்தைக் கடந்து தெற்கே பொதிகைமலை நோக்கிச் செல்கின்றது.

இங்கு அதிக உயரமுள்ள மலை முகடு 'பஞ்சந்தாங்கி' என்று அழைக்கப்படுகிறது. இதன் உயரம் 5135 அடி. இம்மலைமுகடு நாட்டின் பிற பகுதிகள் மிகக்கொடுமையான பஞ்சத்தால் வாட்டமுறுகின்ற காலத்திலும் இவ்விடங்களில் மழைக்குக் காரணமாயிருந்து, அத்துன்பம் வராமல் தடுத்து மக்களைத் தாங்குவதால் 'பஞ்சந்தாங்கி' எனக் காரணப்பெயர் பெற்றது.

குற்றாலமலை உச்சியில் மூன்று முகடுகள் (சிகரம்) உள்ளதால் இம்மலை திரிகூடமலை அல்லது திரிகூடாசலம் என்று வழங்கப்படுகிறது. அழகு செல்வம் நிறைந்த மலையாக உள்ளதால் திருகூடமலை எனக் கூறுபவர்களும் உளர். இம்மலையில் உள்ள காடுகளுக்குச் 'செண்பகக்காடு' என்று பெயர்.

*"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்*
*மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்*
*தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்*
*செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்*
*முழங்குதிரைப் புனலருவி கழங்கென முத்தாடும்*
*முற்றமெங்கும் பரந்து பெண்கள்சிற்றிலை கொண்டோடும்*
*செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப் பந்தடிக்கும்*
*தேனலர் செண்பகம் வானுலகில் வெடிக்கும்*
*ஆடுமர வீனுமணி கோடிவெயி லெரிக்கும்*

*அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்*
*செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்கள் ஆடும்*
*திரிகூடமலை எங்கள் செல்வமலை அம்மே!* "

என்று இம்மலைச்சிறப்பை குற்றாலக் குறவஞ்சி சிறப்புறப் பாடுகிறது. இம்மலையில் தெற்குமலை, வாய்தா மலை, சின்ன ராமக்கல், பழத்தோட்டம் முதலிய தோட்டங்கள் உள்ளன.

### மரங்கள்

திரிகூடமலையில் ஏராளமான மரவகைகள் உள்ளன. அவற்றுள் சில இங்கே குறிக்கப்படுகிறது. மாமரம், நவ்வா மரம் (நாவல்), சாதிக்காய் மரம், மங்குஸ்தான் மரம், தென்னை மரம், பாக்கு மரம், சந்தன மரம், வெக்காலி மரம், கத்தாழை மரம், அத்தி மரம், கல்லத்தி, தோதகத்தி (ஈட்டி — ரோஸ்வுட்), தேக்கு, மகாகன்னி, மயிலம், செண்பகம், உன்னம், ஆலம், அரசு, மருது, காட்டு நெல்லி, அரிநெல்லி, பாவட்டம், வெள்ளை பாவட்டம், வேங்கை, கிராம்பு, கொய்யா, புளி, மதகிரி வேம்பு, பிள்ளை மருது, கருமருது, இலவ மரம், வெகுளா (வெண் தேக்கு), வெள் வாகை (சாந்துப் பொட்டிற்கு இதன் பிசின் உதவும்). கோங்கு (ஏர், வண்டி செய்ய), நாங்கு (ஏருக்கு), பூனா (கைகம்பிற்கு, சிலம்ப ஆட்டத்திற்கு, மரவுரி (பழங்கால மக்கள் இதன் இலைகளையே ஆடையாக அணிந்தனர் என்பர்) மற்றும் கரிப்பலா ஆகியவை ஆகும்.

### பழங்கள்

மாம்பழம், மங்குஸ்தான், கொய்யா, நாவல், பலா, ஆரஞ்சு, உன்னம்பழம், மனோரஞ்சித பழம், அன்னாசி, இலந்தை, வாழை, முந்திரி ஆகிய பழங்கள் இங்கு விளைகின்றன.



### கொடிகள்

சிலப்பங்கொடி (கூரை வீடு கட்ட உதவுவது), தெள்ளுகாய்க்கொடி (இதன் காய் விளையாட, மருந்திற்கு), ஊணாங்கொடி, சர்க்கரை கொடி (சிறுகுறிஞ்சான், சர்க்கரை நோய்க்கு மருந்து), கட்டுக்கொடி (இது உடற்சூடு, மேகம் தணிக்கும்), சீந்திக்கொடி (64 சுரத்தையும் நீக்கும்), கருடக்கொடி (விஷ முறிவிற்கு), நஞ்சரப்பான் கொடி (பாம்பு கடிக்கு) போன்ற மூலிகைக் கொடிகளை ஏராளமாகக் காணலாம்.

### விலங்குகள்

இம்மலை கடுவாய் (புலியை விடப் பெரியது. மாடு போல இருக்குமாம்), புலி, கரடி, யானை, செந்நாய், மான், கிளையாடு, வரையாடு, மிளா (எருமை மாடுபோல் இருக்கும்), குரங்கு, கருமந்தி, சருகுமான், மலை அணில், காட்டுப்பன்றி, முள்ளம்பன்றி, மலை ஆமை, வெருகு, உடும்பு, முள்ளெளி, நீர்நாகம், நீர் நாய் போன்ற விலங்குகளின் வாழ்விடமாகத் திகழ்கின்றது.

### ஆறும் அருவிகளும்

இங்கே பாய்கின்ற நதிக்குச் சிறிய ஆறு என்று பொருள்படும் சிற்றாறு என்று பெயர். பெயர் சிற்றாறு எனினும் பெருமையுடையது.

*சிற்றாறென்பது பெற்றாலும் ஒரு*
*சிறியவர் மனப்பெருமை போல்*
*சித்ரா நன்னதி பெருகி வர*
*சித்ரம் பாரும் பள்ளீரே*

என்று முக்கூடற்பள்ளு ஆசிரியர் புகழ்கிறார். இந்த சிற்றாற்றோடு மலையின் மேல் குளிராட்டி, மயிலோடை என்றும் அழைக்கப்படும் சில்லோடை, பங்களா ஓடை முதலிய ஓடைகளும் ஒன்று கலக்கின்றன. குற்றாலத்திலிருந்து ஐந்து கல்லுக்கு முன்பாகவே

தெற்குமலைத் தோட்டத்தில் பல்லிடங்களில் பிறப்பெடுக்கும் இந்த ஓடைகள் ஒன்றுபட்டு சிற்றாறு எனும் பெயரில் நடைபயில்கின்றன. 'புலவர் நாவிற் பொருந்திய பூங்கொடியாய்' மலையில் சிற்றாறு அசைந்துவரும் அழகை தெற்குமலைத் தோட்டத்தில் கண்டுகளிக்கலாம்.

## தேனருவி

சிற்றாறு முதன்முதலில் நூறு அடி உயரத்திலிருந்து மெல்லிய வெள்ளிக் கயிறாய் இழிகிறது. இவ்வருவியே தேனருவியாம். செங்குத்தான இரு மலைப்பிளவுகளுக்கிடையில் ஒரு கற்சந்திலிருந்து இழியும் இவ்வருவியின் 'ஓவிரந் தொலிக்கும் ஒலி'யும், பூஞ்சாரலும் நெஞ்சைக் குளிர்விக்கும். மலையின் இடுக்குகளில் மலிந்துள்ள தேன்கூடுகள் இவ்வருவியின் பெயருக்குக் காரணமாகும். இங்கு கண்டுகளிக்கத்தக்க அருவி தேனருவி ஒன்றே. தேனருவி மலையடியிலிருந்து சுமார் மூன்று கல் உயரத்தில் உள்ளது.

## செண்பக அருவி

தேனருவியின் கீழ் $1\frac{1}{2}$ கல் தொலைவில் உள்ளது செண்பக அருவி. 'நறும் சண்பகச் சோலை'யில் அமைந்துள்ளதால் செண்பக அருவி எனும் பெயர் பெற்றது. முப்பது அடி உயரமுள்ள அருவியாக விழுகின்றது. குளித்துக் களிக்க சிறந்த அருவி. அருவியின் கீழ் அழகிய பொய்கை உள்ளது.

## வடஅருவி

செண்பக அருவியிலிருந்து ஓடிவரும் சிற்றாறு நடுவில் சிறிது தடுக்கப்பட்டு குடிநீருக்குப் பயன்படுத்தப்படுகிறது. இறுதியில் மாமரங்கள் அடர்ந்த மாவடித்துறையிலிருந்து மலையிலிருந்து சிற்றாறு குதிக்கும் இடமே வடஅருவி எனப்படுகிறது. இவ்வருவி 288 அடி உயரத்திலிருந்து குதிக்கிறது. 288 அடி தூரமும் ஒரே



வீழ்ச்சியாய் விழாமல் மத்தியில் ஒரு துறையில் விழுந்து பொங்கி மேலெழுங் காரணத்தால் இத்துறை 'பொங்குமாங்கடல்' என்று அழைக்கப்படுகிறது. அருவி விழுமிடங்கள் எல்லாம் பாறைகளில் சிவலிங்கங்கள் ஏராளமாகக் காட்சியளிக்கின்றன.

கீழே விழுகின்ற இடத்தில் இந்த அருவியை 'வற்றாத வடஅருவி'யென்று தலபுராணம் புகழும். பொங்குமாங்கடல் வரை குவிந்தும், அதற்குக்கீழ் பரந்தும் விழுவதால் பக்தி நெஞ்சங்களுக்கு இக்காட்சி வெள்ளிச் சிவலிங்கமாய் காட்சியளிக்கிறது. இவ்வட அருவியே பரந்து விழுவதோடு, கீழ்ப்பகுதியில் சிறிது பிரிந்தும் விழுகிறது. இச்சிறுபகுதி மகளிர் குளிக்கப் பயன்படுகிறது. இச்சிறு பகுதியை அம்மன் அருவியென்றும், பரந்த பகுதி சுவாமி அருவியென்றும் பக்தர்கள் கூறுவர்.

## சிற்றருவி

ஐந்தருவிப் பாதையில் செண்பகாதேவி கோயிலுக்குப் போகத் துவங்கும் பாதையில் சிற்றருவி அமைந்துள்ளது. மலையில் ஓரிடத்தில் இவ்வருவிக்கென்றே ஆற்றில் சிறிது நீர் தடுக்கப்படுகின்றது.

## ஐந்தருவி

குற்றாலத்திலிருந்து மேற்கே இரண்டு கல் தொலைவில் சிற்றாற்றின் ஒரு பிரிவு ஐந்து அருவிகளாகப் பிரிந்து விழுகின்றது. இதற்கு ஐந்தருவியென்று பெயர். ஐந்துதலையருவியென்றுங் கூறலாம். இங்கு செல்ல நல்ல கற்சாலையுண்டு. இச்சாலை வழியே ஐந்தருவிக்குச் செல்லுங்கால் மலையின் பசுமையும், நீலச்சாயலும், மலைப்பள்ளங்களில் மஞ்சு சூழ்தலும் இனிய காட்சிகள். ஐந்தருவியின் பக்கத்தில் மக்கள் சமையல் செய்துகொள்ள வசதியாய் ஒரு பெரிய பாறை பந்தல் போல் நின்று நிழல் கொடுக்கும். இதற்கு 'அடுக்களைப் பாறை' என்று பெயர்.

### சாமியார் அருவி

ஐந்தருவிக்கு மேலே, பழத்தோட்டத்தாரின் அனுமதியோடு செல்லின் ஒரு அருவியைக் காணலாம். இங்கு தங்கியிருந்த சாமியார் இதில் குளிக்கும் வழக்கமாதலால் இப்பெயர் பெற்றது.

### புலிஅருவி

குற்றாலத்தின் கிழக்கே ஒரு கி.மீ. தூரத்தில் சிற்றாற்றின் ஒரு கால்வாய் இவ்விடத்தில் அருவியாக விழுந்தோடுகின்றது. தியாகராசர் மாளிகையின் அருகே அமைந்துள்ள இவ்வருவிக்கு 'பாசுபத சாஸ்தா அருவி'யென்றும் பெயருண்டு. இங்குள்ள பாசுபத சாஸ்தா கோயிலையும் தியாகராசர் சீர்ப்படுத்தி மண்டபமும் கட்டியுள்ளார்.

புலி அருவியிலிருந்து கிழக்கே பழைய குற்றாலம் இருக்கிறது. இங்கு அருவியாய் விழுகின்ற நதிக்கு அழகனாறு என்று பெயர். இது கொஞ்ச தூரத்தில் சிற்றாற்றுடன் கலக்கின்றது.



# திருத்தல வரலாறு மற்றும் அதன் சிறப்புகள்

இக்கோயில் பிற கோயில்களைப் போலச் சதுர வடிவாக அல்லது நீண்ட சதுரமாக அமையாது. சங்கு வடிவமாக அமைந்திருப்பது ஒரு தனிப்பெருமை. ஏனெனில் அயன் வடிவங் கொண்டு எல்லா உலகத்தையுந் தோற்றுவித்த முழுமுதல் இறைவன் இங்கே முன் யுகத்தில் திருமாலாயிருந்ததால் அவருடைய ஆயுதங்களுக்குள் சங்கம் கோயிலும் வீதியுமானது. ஆதலால் இக்கோயிலுக்குச் சங்கக் கோயிலென்றும், வீதிக்குச் சங்க வீதியென்றும் பெயருண்டாயிற்று. திருமாலின் சக்கரம் இக்கோயிலின் சிகரமாயினது எனத் தலபுராணம் கூறுகிறது. சங்க வீதி அகத்திய முனிவராலும், மலையத்துவச பாண்டியனாலும் நிர்மாணிக்கப்பட்டதென மற்றொரு வரலாறு கூறுகின்றது. சங்கு, சதுரம், ஆமை, தாமரை, வட்டம் இவ்வைந்து வடிவமுள்ள ஆலயங்களிற் சிறந்தது சங்கக்கோயில் என்று நூல்கள் கூறுவதால் இக்கோயிலின் உயர்வு நன்றாய் விளங்கும். மாவடித் துறையிலிருந்து பார்க்க சங்கு வடிவம் நன்றாய்த் தெரியும். நான்கு வேதங்கள் நான்கு வாயில்களாயின. இறைவனின் நடனங் காண, பிலவேந்தன் வந்த வழி இக்கோயிலுக்கு ஐந்தாம் வாயில் ஆயிற்று. இச்சங்கக் கோயில் வடக்கு வாயிலே முகமாக உடையது. இத்தலத்தின் முக்கிய கடவுளாகிய கூத்தன் திருநடராசப் பெருமான் இவ்வாயில் வழியாகவே விழாக்காலங்களில் திருவீதிகளில் திருவுலாக் கொள்ளப் போய் வருவது வழக்கம்.

இக்கோயிலின் கீழ் மேல் அளவு 376 அடி. தென் வடல் அளவு 407 அடி. இந்த அளவுக்குள்ள நிலப்பரப்பின் நடுவில் திருக்குற்றாலநாதர் கோயிலும், அவருக்கு வலப்பக்கம் குழல்வாய்

மொழியம்மையார் கோயிலும், இடப்பக்கம் பராசக்தி கோயிலும் தனித்தனியாகக் காணப்படுகின்றன. இம்மூன்று கோயில்களுக்கும் பொதுவான ஒரு உள்திருச்சுற்றும் உண்டு. இதற்குச் சங்கவீதி என்று பெயர் எனத் தலபுராணம் கூறுகிறது.

காலத்தாலும் திருப்பணிகளாலும் உருமாறி உள்ளமையால் இக்கோயிலின் தொன்மைத் தோற்றம் வளர்ச்சி பற்றி அறிய இயலவில்லை. இங்குள்ள காலத்தால் முற்பட்ட கல்வெட்டுகள் எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த மாறஞ்சடையன் பரகேசரிவர்மனின் (கி.பி. 765 — 815) வட்டெழுத்துக் கல்வெட்டுகளே. ஆயினும் முதலாம் இராஜராஜ சோழன் காலத்தில் இக்கோயில் பழுது பார்க்கப்பட்டு மாறஞ்சடையன் காலத்து வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தமிழில் வெட்டி வைக்கும் பணியும் நடைபெற்றுள்ளது.

அதற்கடுத்து கி.பி. 1387 — இல் ஜடாவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்திகள் பராக்கிரம பாண்டிய தேவன் காலத்தில் நடுவிமானத்தை உபானம் முதல் ஸ்தூபி வரையிலும் கட்டுவித்து அர்த்தமண்டபத்தையும், மகாமண்டபத்தையும் எடுப்பித்துள்ளான்.

மேற்சுட்டியவற்றால் கல்வெட்டுச் சான்றுகளோடு திருப்பணி பற்றி அறிகிறோம். சோழ மன்னர்களும், பாண்டிய மன்னர்களும் இக்கோயிலில் கர்ப்பகிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், சிகரங் கட்டியும், புதுப்பித்தும் இன்னும் பலவிதமாகப் பண்படுத்தியும் பெரிய பணியாற்றினரென்று கல்வெட்டுகளிலிருந்து வெளியாகின்றது.

பின்னர் இம்மாவட்ட வடகரை ஆதிக்கம் சொக்கன்பட்டிக் குறுநில மன்னர் இக்கோயில், திருமலை, தென்காசி முதலிய இடங்களில் அநேக இறைபணி செய்து புகழ்தேடிக் கொண்டார்கள். கி.பி. 14 — ஆம் நூற்றாண்டின் முதற்பட்டம் செம்புலி சின்னணைஞ்சாத் தேவர் குற்றாலிங்கம் குழல்வாய்மொழியம்மன்



கோயில் பொது முகப்பு மண்டபஞ் செய்து முடித்தனர். குற்றாலம் அன்னசத்திரம் கட்டினர். இவர் ஸ்தானாதிபதி வயித்தியப்ப பிள்ளை, வயித்தியப்ப விலாச மண்டபங் கட்டி முடித்தார். இரண்டாம் பட்டம் வீரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1434 — 1461) குற்றாலிங்கம் குழல்வாய்மொழி உட்சுற்றுப் பிரகாரம் செய்துமுடிக்கப்பட்டது. ஆறாவது பட்டம் குலசேகர ராஜா (கி.பி. 1536 — 1596) காலத்தில் குற்றாலநாதசுவாமி கோயில் தட்டொட்டியும், பசுப்பிரையும் கட்டப்பட்டன. ஏழாவது பட்டம் சின்னணைஞ்சாத் தேவர் (கி.பி. 1596 — 1629) தீர்த்த மண்டபம், சுற்றுப்பிரகாரம், நடைகற்பாவல் முதலிய திருப்பணிகள் நடத்தினர். எட்டாவது பட்டம் சிவனடியாத் தேவர் (கி.பி. — 1630 — 1659) துவஜஸ்தம்பம் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்து முடித்தார்.

பின்னர், கி.பி. 1660 முதல் கி.பி. 1721 வரை இருந்த பெரிய பட்டம் பெரியசாமி, செம்புலி, சின்னணைஞ்சாத் தேவர், சின்னப்பட்டம் இராஜகோபாலத் தேவருஞ் சேர்ந்து காசி பராக்கிரம பாண்டியன் செய்த சித்திர சபைக்குச் செப்போடு வேய்ந்தார்கள். மேலைச் சபை, கீழச்சபை கல் வரிசை தளவரிசைத் திருப்பணி நடத்தினர். ஸ்படிக லிங்கம் அமைத்தனர். சித்திரங்கள் எழுதி வைத்தார்கள். சபை சுற்றுச் சிகரம், முன் மண்டபம், தெப்பக்குளம், நடுமண்டபம், கோபுரஞ் செய்துமுடித்தனர். சித்திர சபைக்குச் செப்போடு வேய்ந்த அரிய சேவையைக் குற்றாலக் குறவஞ்சி ஆசிரியர்

*"நன்னகர்க் குற்றாலந் தன்னில்*
*எங்கும் நாட்டுமெண்ணூற்றெண்பத்தேழாண்டு தன்னில்*
*பன்னகமாமுனி போற்றத் தமிழ்ப்பாண்டியனார் முதற்சிற்றோடு மேய்ந்த*
*தென்னாருஞ் சித்ரசபையை யெங்கள்*
*சின்னணைஞ்சாத் தேவன் செப்போடு மேய்ந்த முன்னாளில்"*

என்று கூறிப் பெருமைப்படுத்தியிருக்கிறார். கொலுமண்டபம், திரிகூட மண்டபம், தேர் மண்டபம், பரமானந்தத் தோப்பு, குறிஞ்சிப் படித்துறைகள் இவர் காலத்தில் ஆக்கப்பட்டனவென்று குறவஞ்சி முதலிய நூல்களினின்று வெளியாகிறது. தெய்வப் பணியில் முன்னின்ற இவ்விரு சகோதரர்களும் திருக்கோயிலில் குற்றாலநாதர் சன்னிதியில் கொடிமரத்தின் தென்பக்கம் வடக்கு நோக்கிய தூண்களில் கற்சிலையாக நின்று இன்றும் வழிபடுகின்றனர்.

மூன்றாம் பட்டம் காளத்தியப்பத் தேவர் சுவாமி தேர், அம்மன் தேர், விநாயகர் கோயில், சுப்பிரமணியர் தேர் செய்து கொடுத்தார். சொக்கன்பட்டிக் குறுநில மன்னரில் ஒருவரின் மனைவி வெளிப்பிரகாரம் முற்றிலும் கல் வரிசை பாவுவதற்குத் தானணிந்த நகைகள் (திருமங்கிலயந் தவிர) அனைத்தையும் கொடுத்தாள் என்றும் வடகரைச் சரித்திரம் கூறுகிறது.

கி.பி. *1891* — ஆம் வருடம் பெருமழையால் அருவி மிக வீங்கி, அதிக வெள்ளம் பாய்ந்து அருகிலிருந்த காசிலிங்க சுவாமி கோயில், தெற்கு வீதியில் செண்பக விநாயகர் கோயில் அழிந்து விட்டன. வைத்தியப்ப விலாச மண்டபம், அருவிக்கரை பாலம், கோயிலின் சில பாகங்களும் சேதமடைந்தன. அதிகப்பொருள் செலவு செய்து விநாயகர் கோயிலைத் திரும்பக் கட்டியும், இதர இடங்களைச் செம்மைப்படுத்தியும் ஒழுங்கு செய்தனர். காசிலிங்க சுவாமி கோயிலுக்கு எப்போதும் வெள்ளத்தின் அபாயம் இருப்பதால் அது கட்டப்படவில்லை. இந்த இலிங்கம் அம்மையாருடன் இப்போது சுவாமி கோயில் பிரகாரம் வாயு மூலையில் சுப்பிரமணியர் கோயில் முன்னால் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது.

தற்காலத்தில் தேவகோட்டை, வி. கரு. சித. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்களும், அவர்கள் குமாரர் காசி விஸ்வநாதன் செட்டியாரவர்களும் கொல்லம் *1100* — ஆம் ஆண்டு (*1925*) தை மீ அம்மன் கோயில் திருப்பணி ஆரம்பித்து கொல்லம்



*1108* — ஆம் ஆண்டு (*1933*) ஆனி மீ முடித்துக் கும்பாபிஷேகமுஞ் செய்தனர். மிகவும் தணிவாயிருந்த குழல்வாய்மொழியம்மையார் கோயில் இப்போது உயரமாகவும், தற்கால நாகரிகத்திற்கு ஏற்றவாறு நல்ல காற்றும் நல்ல வெளிச்சமும் கோயிலுட் புகும்படியாகவும், *1000* மக்கள் ஏககாலத்தில் நின்று அம்மையாரை வழிபடுவதற்குரிய முறையிலும் கட்டிமுடிக்கப்பட்டிருக்கிறது. இம்மண்டபங்கள் பளிங்கு போல் இழைத்த கருங்கல்லால் ஆக்கப்பட்டுள்ளன. இவ்வரிய வேலைப்பாடு சேதப்படாதபடி சுற்றிலும் பித்தளைக் கம்பிகளால் அணியிடப்பட்டிருக்கிறது. உட்கதவுகள், பள்ளியறைக் கதவுகள், சப்பரமஞ்சம் முதலியன அருமையான வேலைப்பாடுள்ள வெள்ளித் தகடுகளால் பொதியப்பட்டுள்ளன. கர்ப்பகிரகத்தின் மேல் ஒரு சிறிய வேசர விமானம் கட்டியிருக்கிறார்கள். அம்மையார் கோயிலைச் சுற்றி ஓர் உட்பிரகாரமும் புதிதாகக் கட்டப்பட்டிருக்கிறது.

## திருமால் சிவபிரான் ஆனது

உமா தேவியார் திருமணத்தைக் காண மூவுலகத்தில் உள்ளவர்களும் இமய மலையிற் கூடியபோது பாரப்பளுவால் வடதிசை தாழத் தென்திசை உயர்ந்தது. இறைவன் அகத்திய முனிவரை நோக்கித் தென்திசை சென்று வடதிசைக்குச் சமமாக்கிப் பொதிய மலையில் வாழக்கடவாயெனக் கட்டளையிட்டார். முனிவர் தான் தென்திசைச் செல்வதாயின் இறைவன் திருமணத்தையும், திருநடனத்தையும் காணமுடியாமற் போகுமே என வருந்த, இறைவன் திரிகூடமலையின் சிறப்பைக் கூறி, அங்கு விஷ்ணுவாயிருந்த தம்மைச் சிவலிங்கமாக்கி மகுடாகமப்படி பூசை செய்ய வேண்டுமென்றும், அப்போது தமது மணக்கோலத்தையும், திருநடனத்தையும் காணலாமென்றும் வாக்களித்து முனிவரைத் தென்திசைக்கனுப்பி வைத்தார். முனிவரும் இறைவன் ஆணையைத் தலைமேற்றாங்கி, தென்திசைச் சென்று திரிகூடமலை வந்து திருவீதி சார்ந்து சிவபிரானிடத்தில் வைத்த அன்பினாலே

கோயிலுட்புக, வடதிசை வாயில் காக்குங் காவலாளர் விஷ்ணு கோயிலில் சிவனடியார் செல்லத்தகாதெனத் தடுத்தனர். உடன் தமக்குத் தமிழ் ஓதுவித்த முருகக் கடவுளிருக்குந் தலம் வினவி இலஞ்சிக்கண் வந்து அவரிடம் முறையிட அவர் தோன்றி "வஞ்சக மறையோரை வஞ்சகத்தால் வெல்ல வேண்டும். ஆதலால் வைணவ கோலத்தோடு கோயிலுட் சென்று வேத மந்திரத்தால் விஷ்ணுவைச் சிவலிங்கமாக்கி வழிபடுக" வென்று அருளிச் செய்து சிவாகமங்களையும் உபதேசித்து மறைந்தார். அன்றிரவு அகத்திய முனிவர் வெண்மணலை ஒரு இலிங்கமாகக் குவித்துப் பூசை செய்து, மறுநாளும் அப்படியே அப்படியே செய்து இரண்டு இலிங்கங்களையும் ஒன்று சேர்த்து 'இருவாலுக நாயகன்' எனப் பெயரிட்டு (வாலுகம் — வெண்மணல்) அயன்மாலான மூர்த்தியைச் சிவலிங்கமாக்க விடைபெற்று நெற்றியில் நாமமிட்டும், மிடற்றில் துளசி மாலையணிந்தும் வைணவ வேடந்தரித்துக் குற்றாலஞ் சென்று சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் பொதுப் பெயர்களைச் சொல்லி

*"முத்தனே முளரிக்கண்ணா மூலமென் றழைத்த வேழப்*
*பத்திமி னெல்லைகாக்கும் பகவனே திகிரியாளா*
*கத்தனே யருள்சூற் கொண்ட கந்தரக் கறுப்பினானே*
*நத்தணி செவியகோல நாடுதற் கரியநம்பி"*

என்று பாடி சங்க வீதியிற் பரவலும், வைணவர் தங்கள் குருவென்று தலை வணங்கிக் கோயிலுள் அழைத்துச் சென்றனர்.

உட்சென்றதும் முனிவர் பூசை திரவியங்கள் கொண்டுவரக் கட்டளையிட்டு வலஞ்சுற்றி உள்ளே புகவும், துவாரபாலகரில் ஒருவர் நேற்று வந்தவர் என்ன, மற்றொருவர் நாமறியோம் என்ன இருவரையும் கையமர்த்தி அப்பாற்போய் துளப மாலையணிந்த மார்பினையும் 'செம்பொற் கிரீடம் புனைந்த தலையினையும்' ஒரு கை சங்கும், ஒரு கை சக்கரமும் தாங்கி நீலமலை போல



நீண்டு உயர்ந்து நின்ற விஷ்ணு மூர்த்தியைத் தரிசிக்க வைணவர்கள் கொணர்ந்த பூசைப் பொருள்களை வாங்கி வைத்துக் கூட்டங்களை வெளியே போக்கித் திருக்கடைக்காப்புச் செய்து, சங்கமிருந்த கையில் மான் இருக்கவும், துளபமிருந்த தலையில் மதியிருக்கவும், பொட்டிருந்த நெற்றியில் கண்ணிருக்கவும், ரத்னமிருந்த மார்பில் பாம்பிருக்கவும், நீண்ட திருமேனி குறுக, குறுகுக என்று கைலைப் பிரானை நினைந்து பரவி திருவடியின்கீழ் அணுகும்போது நீதி நிலைக்க, பொருள் பெருக, அறம் வளர்க, சைவம் ஓங்க, விஷ்ணு மூர்த்தி திருமேனி குறுகிச் சிவலிங்க வடிவாயினார். பின் அவருக்கு அபிஷேகம் செய்து ஆடை அணிவித்துப் பூமாலை புனைந்து மந்திரத்தால் நிவேதித்துத் திருக்கதவைத் திறந்து திருக்குற்றாலத்து இறைவனைப் போற்றி போற்றியென்றேத்திப் புகழ்ந்து, கீழே விழுந்து வணங்கினார்.

வைணவர்கள் அகத்தியரைக் கண்டும் விஷ்ணு மூர்த்தியைக் காணாமல் திகைத்து, அம்முனிவரை நிந்தித்து, அவரைக் கயிற்றினால் கட்ட எத்தனித்தனர். முனிவர் ஒரு தருப்பபைப் புல்லை மந்திரித்து விடவும், அப்புல் வைணவர்களை மோத அவர்கள் பயந்து முனிவரை வணங்கி அபயமருளுக வெனவும் முனிவர் இரங்கி அவர்களை நோக்கி, "திரிகூடநாதர் சங்க வீதியில் தென்மேற்குப்பக்கத்தில் விஷ்ணு மூர்த்தியை (இவர்தான் நன்னகரப் பெருமாள்) வைத்துப் பூசை செய்யுங்கள். சீதரன் சமயமென்றும், சிவபெருமான் சமயமென்றும் வேறுபாடு செய்யாதீர்கள்" என்று கூற, வைணவர்களும் அங்ஙனமே செய்வோமென உறுதிகூறிச் சென்றனர்.

அகத்தியனாரும், கூத்தன் கோயில் ஆதிசைவப் பிராமணரை அழைப்பித்து அவர்களுக்கு அபிடேகஞ் செய்து சிவபூசை விதிகளை உணர்த்திச் சிவாகமங்களை ஓதித் திருக்குற்றாலநாதரை

மகுடாகமப்படி பூசை செய்கவென்று உபதேசித்து பொதியமலை நோக்கி ஏகினர். ஏகுமுன் இறைவன் திருமணத்தையும், திருநடனத்தையும் தரிசித்தார். இன்றும் இக்கோயிலில் பகற்காலம் தேவர்களும் இரவில் அகத்தியனாரும் குற்றாலத்து இறைவர்க்குப் பூசை செய்வதாகவும் புராணம் கூறும்.

குறுமுனி திருமாலைச் சிவனாக்க, அவரைத் தலையில் தன் கைகளால் தொட்டதால் மூலஸ்தானத்தில் சிவலிங்கத்தின் தலைப்பாகத்தில் ஐந்து விரல்களும் பதிந்திருக்கின்றன. திருமுகச் சாயலும் நுட்பமாகத் தெரிகின்றது. குறுமுனி தம்மைத் தொட்டு அமுக்கியதால் இறைவனுக்குத் தலைவலி உண்டாயிற்றென்றும், அதை நீக்கவே நாடோறும் தைல முழுக்குச் செய்கிறாரென்றும் ஒரு வழக்கு கர்ணபரம்பரையாய் வழங்குகின்றது.

குற்றாலநாதருக்கு வற்றாக் குடிரும் மாறாத் தலையிடியும் என்ற ஒரு பழமொழியும் உண்டு. சிவபெருமான் திருமாலாயிருந்த காலத்தில் இத்தலம் 'திருமுற்றம்' என்றழைக்கப்பட்டதெனப் புராணம் கூறுகிறது.

ஆதியில் இத்தலப்பெருமான் திருமாலாய் இருந்தார் என்பதற்கு புராணக் கூற்று தவிர வேறு அகச்சான்றாவது புறச்சான்றாவது கிடைக்கவில்லை.



# கோயில் கட்டட அமைப்பு

## கருவறை

*"உற்றாரை யான் வேண்டேன் ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன் கற்பனவு மினியமையுங்*
*குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா உன் குரை கழற்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்துருக வேண்டுவனே"*

என மாணிக்கவாசக சுவாமிகள் உருகிப் பாடிய உயரிய இறைவன் ஒருகத்தில் அரியாகிப் பேருகத்தில் அரனாக வீற்றிருக்கும் திரிகூடநாதன் ஈசானம், தத்புருடம், அகோரம். வாமதேவம், சத்யோஜாதம் என்ற ஐந்து திருமுகங்களுடன் சிவலிங்க உருவில் திருக்கோயில் கொண்டருளியிருக்கிறான். இம்முகங்கள் முறையே அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் தொழில்களைக் குறிக்கும் என்பர். கருவறை சதுர வடிவிலேயே அமைந்துள்ளது. கருவறை வாயிலின் தெற்குப் பக்கத்தில் விநாயகர் சிற்பம் உள்ளது. அதற்குப் பக்கத்தில் விளக்கேந்திய சேவகனின் பித்தளைச் சிற்பம் உள்ளது.

## முன்மண்டபம்

கருவறையோடு தொடர்ந்து அர்த்தமண்டபம் அமைந்துள்ளது. இதை அடுத்துள்ள முன்மண்டபத்தில் எட்டு தூண்கள் உள்ளன. ஒரு பெரிய தூணும் ஒரு சிறிய தூணும் அமைந்த நிலையில் ஒரே கல்லில் தூண்கள் அமைக்கப்பட்டுள்ளன. இரண்டாவது இடதுபுற தூணில் முருகன் சிற்பம் உள்ளது. இத்தூண்கள் தாங்கும் இரு பலகைக் கற்களில் சிறிய அளவில் சிற்பங்கள் உள்ளன. தென்பகுதியில் குதிரைகள் மேல் மனிதர்

பயணஞ் செய்யும் காட்சிகளும், மான்களின் சிற்பங்களும் காணப் படுகின்றன. வடக்குப் பகுதியில் திருமால் அரவின் மேல் பள்ளிகொண்ட காட்சியும், பக்கத்தில் அடியார் கோலூன்றி காவல் காப்பதும், பல்வேறு நடனச் சிற்பங்களும், சிம்ம வரிகளும் காணப்படுகின்றன. இம்மண்டபத்தில் ஒரு பெரிய மணி தொங்கவிடப்பட்டுள்ளது. இம்முன்மண்டபத்தில் நடுவே தெற்கிலும் வடக்கிலும் வாயில் அமைந்துள்ளது.

மண்டபத்துள் கிழக்கு நோக்கி சந்திரசேகரர், அகத்தியர், விநாயகர் செப்புத் திருமேனிகள் உள்ளன. தெற்கு நோக்கி வடக்குப் பக்கத்தில் நடராஜப் பெருமானின் செப்புத் திருமேனி அமைந்துள்ளது. பக்கத்தில் மாணிக்கவாசகரும், காரைக்கால் அம்மையாரும் தொழுது கொண்டிருப்பர். ஆடல் வல்லானின் வலப்பக்கம் அன்னபூரணி, அதிகார நந்தி, அகத்தியர், தில்லைவாழந்தணர், சம்பந்தர், அப்பர், சுந்தரமூர்த்தி, சேரமான் பெருமாள், நித்ய உற்சவர் என்ற சீவிலி நாயகர் அஸ்திர தேவர் வீற்றிருப்பர். 12 திருமுறைகளடங்கிய திருமுறைக் கோயிலும் இங்கேயுள்ளது. இடப்பக்கம் மற்றொரு நடராசர், சிவகாமியம்மை, பிட்சாடனர் காட்சியளிப்பர்.

கருவறையும் முன்மண்டபமும் இணைந்துள்ள கட்டடப் பகுதி கருங்கல்லால் ஆனது. இம்மண்டப அதிட்டானத்தின் மேலுள்ள சுவர் (கால்) பகுதியில் அரைத்தூண்கள் அழகுற அமைக்கப்பட்டுள்ளன. இப்பகுதி நெடுஞ்சுவராக இருந்தால் அழகு இராது என்பதால் ஆங்காங்கே அரைத்தூண்களும், கோட்டங்களும், மகரத் தோரணங்களும் அமைக்கப்பட்டு அழகுற அமைக்கப்பட்டுள்ளன.

பெரிய அரைத்தூண்கள் முப்பட்டையாகச் செதுக்கி அதில் பூவேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. சிறிய அரைத் தூண்கள் உருளை அமைப்பில் செதுக்கப்பட்டு பூவேலைப்பாடுகள் அமைக்கப்பட்டுள்ளன.



கருவறை சுவர்ப்பகுதி கோட்டங்களில் தெய்வ உருவங்களை வைக்காமல், அடிப்பகுதியிலே கோட்டம் அமைத்து வைக்கப்பட்டுள்ளமை நோக்கத்தக்கது. இம்மண்டபத்தின் அடிப்பகுதிகளிலும், சுவரிலும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

## திருச்சுற்று மாளிகை

திருச்சுற்று மாளிகையின் கீழ்ப்பக்கம் ஆட்கொண்டார் குறட்டில் அதிகார நந்தி நிற்கின்றார். இறைவனை வணங்கிய நிலையிலும் தேவி பக்கத்திலும் நிற்கின்றனர். இலிங்க வடிவில் இறைவன். அமர்ந்த நிலையில் ஒரு முனிவர் காணப்படுகிறார்.

திருச்சுற்று மாளிகையின் இப்பகுதியில் உள்ள தூண்களுடன் கருவறை புதுப்பிக்கப்பட்டதன் விளைவாக அங்கிருந்த பரகேசரி மாறஞ்சடையன் கால வட்டெழுத்துக் கல்வெட்டுத் தூண்கள் நான்கு இங்கு இடம் பெற்றுள்ளன. மேலே கூறிய நந்திக்கடுத்து 3′ உயரமுள்ள சூரியன் சிலை வைக்கப் பட்டுள்ளது.

கிழக்கு மேற்கான திருச்சுற்றின் உட்புறச் சுவர் முழுவதும் கல்வெட்டுகள் உள்ளன.

இப்பகுதியில் வடக்குமுகமாக கும்பமுனி, பிரம்மா, பிராம்மி, மாகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி, சுரதேவர், மகாலட்சுமி, விஷ்ணு, நரசிம்மமூர்த்தி முதலியோரது சிற்பங்கள் உள்ளன. இதில் உள்ள சப்த மாதர்களும் பழைய சிற்பங்களுள் சிலவே.

தென்மேற்கு மூலையில் கன்னி விநாயகரும் அதனையடுத்து சோமாஸ்கந்தர், குழல்வாய்மொழி அம்மை, விநாயகர், முருகன் வள்ளி தெய்வானை, சண்டேசுவரர் செப்புத் திருமேனிகள் உள்ளன. இதனையடுத்து உள்ள முருகன் செப்புத் திருமேனி பழைய திருமேனிகளில் ஒன்று. இதனைச் சந்திரன் என்று தவறாகக் குறிப்பிட்டுள்ளனர்.

செப்புத் திருமேனிகளைத் தொடர்ந்து பஞ்சபூதத் தல இலிங்கத் திருமேனிகள் இடம்பெற்றுள்ளன. திருச்சுற்றின் வடமேற்கில் முருகன் வள்ளி தெய்வானை உருவங்கள் உள்ளன.

கிழக்குப் பக்கத்தில் சனிபகவான் உருவம் உள்ளது. வடக்கில் கருவறையை ஒட்டி சண்டிக்குச் சிறுகோயில் உள்ளது. கருவறைக் கோட்டங்களில் தட்சிணாமூர்த்தி, திருமால், பிரம்மா உருவங்கள் சிறிதாகச் செய்து வைக்கப்பட்டுள்ளன.

## குழல்வாய்மொழி அம்மன் கோயில்

குறும்பலாநாதர் கோயிலின் தெற்குப் பக்கத்தில் குழல்வாய்மொழியம்மன் கோயில் உள்ளது. இக்கோயிலை தேவகோட்டையைச் சேர்ந்த வி. கரு. சித. சோமசுந்தரஞ் செட்டியார் கி.பி. 1932 — இல் (கொல்லம் 1108) திருப்பணி செய்து முடித்துள்ளார். அதோடு இக்கோயில் கதவுகளும், சப்ரமஞ்சங்கள் முதலியனவும் வெள்ளியினால் செய்துள்ளார். இப்பணிகளுக்கான செலவில் ஐந்தில் ஒரு பங்கு பணத்தை தேவகோட்டை அரு. பிச. அரு. அருணாசலஞ் செட்டியார் அளித்துள்ளார். இதனை அங்குள்ள கல்வெட்டுத் தெரிவிக்கிறது.

வாயிற்படிக் கதவுகளில் வேலைப்பாடுகள் ஏதுமில்லை. முன்மண்டபத்தை ஆறு யாளிமுகத் தூண்கள் அழகு செய்கின்றன. சுவர்களில் திருஞானசம்பந்தர் பதிகங்கள் சிலவும், நாவுக்கரசரின் திருவரங்க மாலையும் சலவைக்கற்களில் பொறித்து வைக்கப் பட்டுள்ளன.

குழல்வாய்மொழியம்மை கோயிலின் சிற்பங்கள் இருபதாம் நூற்றாண்டு செட்டிநாட்டுக் கலைக்கு எடுத்துக்காட்டாய் விளங்குகின்றன. கருவறை மண்டபத்தூண்கள் கருங்கல்லில் பளிங்கு போல் தேய்த்துக் கட்டப்பட்டுள்ளன. தூண்களின் மேற்பகுதி



தாமரைப் போதிகைகளாலும், அடிப்பகுதி சிறு சிற்பங்களாலும் அழகுபடுத்தப்பட்டுள்ளன. இவ்வழகு கெடாவண்ணம் காக்க சுற்றிலும் செப்புக்கம்பி வேலி இடப்பட்டுள்ளது.

குழல்வாய்மொழி அம்மன் கோயில் கருவறையின் தென்மேற்கு மூலையில் கைலாசநாதர் கோயிலும், வடமேற்கு மூலையில் துர்க்கைக் கோயிலும் உள்ளன. கருவறையினுள் வடக்குப் பக்கத்தில் ஒரு பெண் அடியாள் வணங்கும் நிலையில் செப்புத் திருமேனி ஒன்று உள்ளது. இது இக்கோயில் திருப்பணியாளர் துணைவியின் வணங்கிய கோலமாக இருக்கலாம். இக்கோயிலின் பள்ளியறைக் கதவுகள் வெள்ளி போர்த்து, கதவு கட்டடங்கள்தோறும் சிங்கத்தின் வாயில் மணி தொங்கவிடப் பட்டுள்ளது.

## சங்க வீதி

திருக்குற்றாலநாதர், குழல்வாய்மொழியம்மன், பராசக்தி கோயில்களைச் சுற்றி அமைந்துள்ள திருச்சுற்றுக்குச் சங்கவீதி என்று பெயர் என்பதை முன்பே பார்த்தோம். குழல்வாய்மொழியம்மன் கோயில் வாசலில் இருந்து வலமாகச் சுற்றி வந்தால் பல சிறு கோயில்களைக் கண்டு வழிபடலாம். இறைவி கோயிலின் தென் வாயில் எதிரே குறும்பலா நாதர் இக்கோயிலின் தல மரமான குறும்பலாவின் கீழ்க் காட்சியளிப்பார். பண்டைய குறும்பலாவின் பட்டுப்போன மரப்பகுதிகள் வேலியிட்டுக் காக்கப்பட்டு வருகின்றன.

இக்கோயிலை அடுத்து அறுபத்து மூவர், பிள்ளையார், கயிலாயநாதர் சிற்பங்களைக் காணலாம். இறைவி கோயிலுக்குத் தென்மேற்கில் நன்னகரப் பெருமாள் கோயிலும், அதனை அடுத்து சைலப்பர் கோயிலும் அமைந்துள்ளன. அதனை ஒட்டி வல்லபை விநாயகர் கோயில் உள்ளது. நன்னகரப் பெருமாள் கோயிலுக்கு வடக்கில் பாபவிநாசர் இலிங்க வடிவில் அமர்ந்துள்ள காட்சியும்,

அதற்கடுத்து உலகம்மை கோயிலும் உள்ளது. இக்கோயில் வடக்குச் சுவர் முழுவதும் கல்வெட்டுகள் நிறைந்துள்ளன. இதனருகே அருவி நீர் சிறு காலாக ஓடிவருகிறது.

பாபவிநாசர் கோயிலுக்கு சற்று வடக்கில் நெல்லையப்பர் காந்திமதி கோயிலும், இவர்களுக்கு வடபால் குறுமுனிக்கு மணக்கோலங் காட்டிய நாதர் அம்மையின் வலக்கைப் பற்றி நிற்கின்றார். இவற்றை ஒட்டி வடக்கில் நாறும்பூ நாதர், சங்கரலிங்க நாதர், பால்வண்ண நாதர், ஒப்பனையம்மன், சொக்கலிங்கர் கோயில்கள் உள்ளன.

இக்கோயில்களை அடுத்து ஐயனார் கோயிலும், அதன் அருகில் மதுநாதேசர், அறம் வளர்த்த நாயகி கோயிலும், அகத்தியர் வாசுகி கோயில்களும் உள்ளன.

பராசக்தி கோயிலுக்கு பின்புறம் சோமலிங்கம் கோயில் உள்ளது. இங்கு நின்று மேற்கில் உள்ள பிள்ளையார், ஈசுவரன், தெற்கில் உள்ள விமானம், திரிகூடமலை, சிற்றாற்றருவி ஆகிய ஐந்தையும் வழிபடலாம். இவ்விடத்திற்கு வடக்கில் சகசரலிங்கக் கோயில் உள்ளது. இங்குள்ள சகசரலிங்க வழிபாட்டிற்காக ஸ்ரீவல்லபதேவன் என்னும் பிற்காலப் பாண்டியன் காலத்தில் (கி.பி. 1590) வேம்பு நாட்டு இடது வேலியூரன் தென்னார் நாட்டு குணராம நல்லூரில் நிலக்கொடையளித்துள்ளான்.

பராசக்தி கோயிலுக்கு வடக்கில் காசி விசுவநாதர் விசாலாட்சி கோயிலும், தென்கிழக்கில் சிவாலய முனிவர் கோயிலும், தெற்கில் பைரவர் கோயிலும், நவகோள்களும் பல மண்டபங்களும் அமைந்துள்ளன. இம்மண்டபங்களில் நமஸ்கார மண்டபத்தின் முன் பெரும் பலிபீடமும், கொடிக்கம்பமும் உள்ளன. இது தவிர எண்ணற்ற சிற்பங்கள் ஆங்காங்கே இடம்பெற்றுள்ளன. பொதுவில் இதனை சங்க வீதி என்பதை விட கோயில் வீதி என அழைக்கலாம்.



இதற்கு வடப்பக்கம் மகாலிங்கம் கோயில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இக்கோயில் வாயிலின் தென்புறம் விநாயகர் சிற்பம் உள்ளது.

பராசக்தி கோயிலுக்கு நேர் வடபுறம் காசி விஸ்வநாதர் விசாலாட்சியம்மன் கோயில் அமைந்துள்ளது. ஒரே மண்டபமாக அமைந்துள்ள இக்கோயிலில் கிழக்கு நோக்கிய வாயிலில் காசி விஸ்வநாதரும், தெற்கு நோக்கிய வாயிலில் விசாலாட்சியும் அமர்ந்துள்ளனர். காசி விஸ்வநாதர் வாயிலின் தென்புறம் விநாயகர் சிற்பமும், வாயில் முன் சிறு நந்தி சிற்பமும் உள்ளன.

விசாலாட்சியம்மன் கோயிலுக்குக் கீழ்ப்புறம் ஒரு பீடமும், சில பின்னப்பட்ட ஐயனார் முதலிய சிற்பங்களும் உள்ளன. அதற்குப் பக்கத்தில் வடக்கு வாயில் அமைந்துள்ளது.

பராசக்தி கோயிலின் நேர் தென்கிழக்கில் மேற்குப் பார்த்த நிலையில் சிவாலய முனிவர் கோயில் அமைந்துள்ளது. முனிவரின் சிற்பம் அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. வாயிலின் வடபுறம் விநாயகர் சிற்பம் உள்ளது.

இக்கோயிலின் வடபுறம் சந்தனம் அரைக்கும் கல் உள்ளது. அதற்கு சற்று கிழக்கே மேற்குப் பார்த்த நிலையில் யாகசாலை ஒன்று உள்ளது.

இதற்கு தெற்கில் பைரவர் கோயில் உள்ளது. இதன் கீழ்புறம் கருவூல மண்டபம் தெற்கு நோக்கிய வாயிலையுடையதாய் அமைந்துள்ளது. இதன் சுவரின் மேற்பகுதியில் கி.பி. — 11 (அ) 12 — ஆம் நூற்றாண்டைச் சார்ந்த யாளிவரிச் சிற்பங்கள் காணப்படுகின்றன.

இதற்கு சற்று தென்புறம் நவகோள்கள் அமைந்துள்ளன. இதற்கு சற்று தென்மேற்கில் மணிமண்டபம் அமைந்துள்ளது. கருவறை முன்மண்டபத்திற்கு வெளியே நமஸ்கார மண்டபம் அமைந்துள்ளது. இதன் தூண்கள் சிறப்பாக அமைந்துள்ளன.

### பராசக்தி பீடம் (அ) தரணி பீடம்

இது குற்றாலநாதர் கருவறையின் இடப்பக்கத்தில் அமைந்துள்ளது. நுழைவாயிலின் இருபக்கமும் துவாரபாலகிகள் உள்ளனர். கருவறையின் தென்பக்கம் கலைமகளும், வடப்பக்கம் திருமகளும் ஓவியமாக வரையப்பட்டுள்ளனர்.

கருவறைக்கு முன் மேற்சுவரில் பராசக்தி பீடம் ஓவியத்தால் வரையப்பட்டுள்ளது. அதை உற்று நோக்கின் அதனுள் பாண்டியர்களின் இலச்சினையான இருமீன்களும், செண்டும் காணப்படுகிறது.

கருவறையுள் சிவகோணம் 4, சிற்சக்திகோணம் 5 ஆக 9 கோணத்துள்ளும் 40 முக்கோணச் சக்கரம் தோன்றும். அதன்மேல் வளைவாக எழுதி நிறைந்த எட்டிதழும் அதற்குமேல் 16 இதழும் அதற்கு மேல் மூன்று வட்டத்தினிடமும் 3 சதுரத்தினிடமும் ஓர் பீடம் உள்ளது. இது கருணை வடிவாகிய பராசக்தி பீடம். பராசக்தி மேலான யோகத்தில் இருப்பதாலே யோகபீடமென்றும் உலகமெல்லாந் தோற்றுவித்தற்கு மூலமாயிருத்தலாலே தரணி பீடமென்றும் சொல்லப்படும். இப்பீடம் அறுபத்து நான்கு சக்தி பீடங்களில் ஒன்று. சிவன் சிற்பறையின் மந்திர சக்கரங்கள் அடங்கிய ஆலயம். சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும்படி உலகைப் படைக்க எண்ணுங்கால் அவனில் ஒடுங்கியிருந்த சிவசக்தி அவனோடியைந்து நின்றே அவனைவிட்டுப் பிரிகிறது. சிவசக்தி உயிர்களின் மலத்தை நீக்க வேண்டுமென்று இச்சித்தபோது பராசக்தியெனப் பெயர் பெறும் இச்சக்தி உலகத்துடன் சம்பந்தப் படாது நிற்கும். தொழில் செய்வதற்கு உலகத்தோடு சம்பந்தப்படும் போது ஆதிசக்தி அல்லது திரோதான சக்தியெனப் பெயர் பெறும். இந்த ஆதிசக்தி தனது இச்சை அறிவு செயல்களை முறையே விளக்குமுகத்தால் தொழில் புரிவாள். அவ்வாறு செய்யுங்கால் சிவசக்தி சிவசக்தி ஆன்மாக்களுக்கு நேரே தொழில் புரியாது



தத்துவங்களை இயக்க அவற்றால் ஆன்மாக்களிடம் தொழில் நிகழ்கின்றது. பராசக்தி ஆதிசக்தியாய்த் தோன்றி அரி, அயன், அரன் மூவரையும் ஒவ்வொரு கருப்பத்தில் பயந்தாள். இவள் சன்னிதானத்தில் இவர்கள் விளையாடுந் தாணுமாலயப் பூந்தொட்டில் ஆடிக்கொண்டேயிருக்கிறது. பராசக்தி பீடத்தைச் சுற்றி சப்தமாதர்களாகிய பிராமி, மாஹேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, மாஹேந்திரி, சாமுண்டி, மகாலட்சுமி, இரு கணபதி, இரு முருகன் வீற்றிருக்கின்றனர். இக்கோயிலின் பின்பக்கத்தில் சப்தமாதர்களும், கணபதி, வீரபத்ரர் முதலியோரும் இருக்கின்றனர். கோயில் வாயிலின் வடப்பக்கம் மகாமதுகரீயும் தென்பக்கம் மகாமோதினியும் துவாரபாலிகைகளாக நிற்கின்றனர்.

தரணி — தரணமென்னும் வடமொழி கடத்தலெனும் பொருட்டாகலான் நோயைக் கடப்பித்தலின் மருத்துவனுக்குத் தரணீயெனக் காரணக்குறியாயிற்று. இங்கு நோய், பிறவிநோய் (சிவஞானநித்தியார். சூ. 2. பாக. 4). ஒவ்வொரு புரட்டாசி மாதமும் நவராத்திரி விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படும்.

குங்கும அபிஷேகம், இலட்சார்ச்சனை. விசேஷ அலங்காரம் விமரிசையாய் நடக்கும். விஜயதசமியன்று வெற்றி முரசு ஒலிக்க, மத்தளங் கொட்ட, சங்கநாதம் பெருக ஒருவகை முழக்கத்துடன் விரைவாய் இறைவி வெற்றிக்கொடி கொண்டு வருவது மனதைக் கவரும்.

### திரிகூட மண்டபம்

கோயிலின் கிழக்குவாயில் முன் உள்ள பெரிய மண்டபத்திற்கே திரிகூடமண்டபம் என்று பெயர். இரண்டு பக்கமும் பதின்மூன்று தூண்கள் வீதம் முன்மண்டபம் அமைந்துள்ளது. பதின்மூன்று தூண்களில் இறுதி மூன்று தூண்களில் வணங்கும்

நிலையிலுள்ள சிற்பங்கள் முழுமையுறாமல் செதுக்கப்பட்டுள்ளன. அவ்விடத்து மேற்பகுதியில் பன்னிரண்டு ராசிகள் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன.

இம்மண்டபத்திலுள்ள உற்சவ மேடையில் கிழக்கிலும் மேற்கிலுமாய் இரு துவாரபாலகர்களின் சிற்பம் உள்ளன. மேற்கு துவாரபாலகரின் வலதுகரம் எச்சரிக்கும் பாவனையில் சூசி ஹஸ்தத்தில் உள்ளது. இடது கை கதையில் உள்ளது. வலது கால் கதையில் நாகத்தின் தலையில் உள்ளது. வாயில் இரு பக்கமும் வீரப்பற்கள் உள்ளன.

கிழக்கில் உள்ள துவாரபாலகரின் வலது கை கதையில் படிந்து, ஆகூய வரத ஹஸ்தத்தில் உள்ளது. இடது கை விஸ்மய ஹஸ்தத்தில் உள்ளது. வலது கால் கதையில் உள்ள நாகத்தின் தலையில் படிந்துள்ளது.

சபாபதி மண்டபம் எனப்படும் இந்த உற்சவ மண்டபத்தில்தான் மாத உற்சவ காலங்களில் உற்சவ மூர்த்திகளுக்கு அபிஷேக அலங்கார அர்ச்சனைகள் நடைபெறும்.

திரிகூட மண்டபத்திலிருந்து நமஸ்கார மண்டபத்திற்கு நுழையும் வாயிலில் மரத்தாலான சிறப்புமிகு மண்டபம் அமைந்துள்ளது. (இதுபற்றி மரச்சிற்பங்களில் விளக்கப்பட்டுள்ளது).

நுழைவு வாயிலின் தெற்குப்பகுதியில் துவார விநாயகராகிய அம்பல விநாயகரும், வடக்குப் பகுதியில் துவார சுப்பிரமணியராகிய ஆறுமுக நயினாரும் உள்ளனர்.

இத்திரிகூட மண்டபத்தின் தெற்குப் பகுதியில் திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பாமாலை (சகா. *1498*) காலத்து கல்வெட்டுடைய கற்றூண் உள்ளது.

திரிகூட மண்டபம் என்பதற்கேற்ப இங்கு கூரையில் மூன்று மேடு பள்ளங்கள் காட்டப்பட்டுள்ளன.



## ராஜகோபுரம்

கோயில் கீழ வாயிலிலிருந்து உள்ளே செல்ல முதலாவது திரிகூட மண்டபம் அமைந்துள்ளது. இம்மண்டபத்தின் முன், மேற்பகுதியில் ராஜகோபுரம் என வழங்கப்படும் சிறிய கோபுரம் அமைந்துள்ளது.

நுழைவு வாயிலின் இருபக்கமும் யானைச் சிற்பங்கள் மண்டபத் தேரை இழுப்பதுபோல் அமைக்கப்பட்டுள்ளன. ஒரு அரைவட்டப் படியும் சேர்த்து மொத்தம் ஏழு படிகள் மண்டபத்தில் ஏற அமைந்துள்ளன. மண்டபத்தினுள் நான்கு வரிசையாய் தூண்கள் உள்ளே நீண்டு செல்கின்றன. ஒவ்வொரு தூணிலும் முனிவர், இறைவன், இறைவி முதலியோர் புடைப்புச் சிற்பங்களும், பூவேலைப்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன. கோபுரத்தில் சுதையால் செய்யப்பட்ட சிற்பங்கள் காட்சியளிக்கின்றன.



# சிற்பக்கலையின் சிறப்புகள்

சிற்பங்கள் தெய்வ உணர்வுமிக்க சொல்லேர் உழவர்களின் கருத்தை நெஞ்சில் பதித்து கல்லேர் உழவர்கள் கல்லில் பதிக்கும் கவிதைகள் என்பதை,

> "பல தெய்வங்களின் உருவங்களை, பல்வேறு நிலைகளில் சிற்பங்களாகச் செதுக்குவதற்கும், சுதையினால் செய்வதற்கும், வண்ண ஓவியங்களாக வரைவதற்கும் வழிகாட்டியாக அமைந்த நூல்களே சிற்ப நூல்களாகும். இவற்றில் பல்வேறு தெய்வங்களின் உருவ நிலைகள் தியான வர்ணனையாக அமைந்துள்ளன. இவற்றை அகத்தின் கண்நிறுத்தி கல் கல் என்ற உளியின் ஓசையூடே கல்லிலே அழியாத காவியத்தைப் படைத்தவர்கள் சிற்பாசிரியர்கள்"

என்று சிறப்புறக் கூறுவார் முனைவர் மேனாள் இயக்குநர். திரு. இரா. நாகசாமி அவர்கள்.

## கற்சிற்பங்கள்

### தெய்வத் திருமேனிகள்

இங்குள்ள கருவறை கோட்டங்களில் தட்சிணாமூர்த்தி, திருமால், நான்முகன் முதலியோரது சிற்பங்கள் கருவறை மண்டபத்துச் சுவர்ப்பகுதியிலேயே இல்லாமல் அதிட்டானப் பகுதியிலேயே சிறிய கோட்டங்களில் சிறிய சிற்பங்களாய் அமைந்துள்ளன.



### தட்சிணாமூர்த்தி

இச்சிற்பம் கருவறையின் தென்புற தேவகோட்டத்தில் உள்ளது. சுமார் ஒன்றரை அடி உயரமுள்ளது. தலைப்பகுதி ஜடாபாரத்தைக் கொண்டுள்ளது, வலது காதில் மகர குண்டலம், இடது காதில் பத்ர குண்டலம், கழுத்தில் ஆரங்கள், மார்பில் புரிநூல், உதரபந்தம் ஆகியவை காணப்படுகின்றன. இடுப்பிலிருந்து பாதம் வரை ஆடையும், நான்கு கரங்களும், அதில் மேல் வலக்கரத்தில் அக்கமாலை, கீழ் வலக்கரம் சின்முத்திரை, மேல் இடக்கரத்தில் மலர், கீழ் இடக்கரம் குத்திட்டு வைத்துள்ள இடக்கால் முட்டியின் மேல் நீட்டியவாறு, இடக்காலைக் குத்திட்டு, வலக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்த நிலையில் உள்ளது. வலக்காலின் கீழ் முயலகன் காணப்படுகிறான். தட்சிணாமூர்த்தியின் இருபுறங்களிலும் இரண்டு முனிவர்கள் காணப்படுகின்றனர். இதன் காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டாகும்.

### திருமால்

கருவறையின் மேற்குக் கோட்டத்தில் திருமால் சிற்பம் உள்ளது. அமர்ந்த நிலையில் கிரீட மகுடம் தரித்து, இரண்டு காதுகளில் மகர குண்டலங்களும், கழுத்தில் பட்டையான ஆரங்கள் கொண்டு உள்ளது. புரிநூல், உதரபந்தம், தோள்வளை ஆகியவை பிற ஆபரணங்களாக உள்ளது. நான்கு கரங்கள் முறையே, மேல் வலக்கரம் சக்கரம், கீழ்வலக்கரம் அபய முத்திரை. மேல் இடக்கரத்தில் சங்கு, கீழ் இடக்கரம் வரத முத்திரையையும், இடக்காலை மடக்கி, வலக்காலைத் தொங்கவிட்டு அமர்ந்துள்ள நிலையில் காணப்படுகிறது. இதன் காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டாகும்.

### நான்முகன்

கருவறையின் வடக்குக் கோட்டத்தில் அமர்ந்த நிலையில் உள்ள இச்சிற்பம் நான்கு முகங்களையும், கழுத்தில் பட்டையான

இரு ஆரம், புரிநூல், உதரபந்தம், தோள்வளை, கைவளை, இடுப்பிலிருந்து பாதம் வரை ஆடை, மேல் வலக்கரத்தில் அக்கமாலை, மேல் இடக்கரத்தில் கெண்டி, கீழ் இரு கரங்களையும் தியான முத்திரையில் ஒன்றின் மேல் ஒன்றாக வைத்து, இரு கால்களையும் மடக்கி, சுகாஸனத்தில் அமைந்துள்ளது. இதன் காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டாகும்.

**சண்டிகேஸ்வரர்**

கருவறையின் வடக்கில் தெற்குப் பார்க்க அமைந்துள்ள சிறு கோயிலில் உள்ள சிற்பம் சண்டிகேஸ்வரர். இவர் சிவனுடைய அதிகாரியாகக் கருதப்படுகிறார். கங்கைகொண்ட சோழபுரத்திலும், வாலீசுவரத்திலும் காணப்படும் சண்டிகேஸ்வர அனுக்கிரக மூர்த்திகளின் சிற்பங்கள் உலகப்புகழ் வாய்ந்தவை. எனவே சிவனின் அணுக்க அதிகாரியாகக் காணப்படும் இவர் சிவன் கோயில்களில் கருவறையின் வடக்கில் காணப்படுவது மரபு.

இச்சிற்பம் ஜடாபாரம் அணிந்து, வலது கையில் மழு, இடது கை குத்திட்ட இடது கால் முட்டியின் மீது படிய, இடது கையை நீட்டியவாறு காணப்படுகிறது. வலது காலைத் தொங்கவிட்ட நிலையில் உள்ளது.

**பரிதியங்கடவுள்**

கருவறையின் முன்மண்டபத்தின் தெற்குவாயில் அருகே அதாவது திருச்சுற்று மாளிகையின் கீழ்ப்பகுதியில் உள்ள இச்சூரியனார் சிற்பம் சுமார் மூன்று அடி உயரத்தில் நின்ற நிலையில் உள்ளது.

இதில் கரண்ட மகுடமும், தலையின் பின்னால் ஒளிவட்டமும் காணப்படுகிறது. மேல் இரு கரங்களிலும் தாமரை மலர். கீழ் வலக்கரம் அபய ஹஸ்தமும், கீழ் இடக்கரம் வரத ஹஸ்தமுமாக காட்சியளிக்கிறது. இதன் காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டாகும்.



கழுத்தில் ஆரங்கள், கைவளை, தோள்வளை, இடுப்பிலிருந்து பாதம் வரை நீளும் ஆடை பக்கவாட்டில் இருபுறமும் விரிந்து காணப்படுகிறது.

**முருகன்**

கருவறையின் பின்புறமும் திருச்சுற்று மாளிகையின் மேற்குப் பகுதியிலும் இச்சிற்பம் அமைந்துள்ளது. இதனைச் சந்திரன் எனத் தவறாகக் குறிப்பிட்டுள்ளனர். இங்குள்ள காலத்தால் முற்பட்ட சிற்பங்களில் இதுவும் ஒன்று. சுமார் கி.பி. எட்டாம் நூற்றாண்டாக இருக்கலாம்.

இரு காதுகளிலும் பத்ர குண்டலம். மார்பில் சன்னவீரம், இடுப்பிலிருந்து பாதம் வரை கனத்த ஆடையுடனும் பக்கவாட்டில் விரிந்த நிலையிலும் உள்ளது. நான்கு கரங்களில் மேல் வலக்கரத்தில் அக்கமாலையும், கீழ் வலக்கரத்தில் ஆகூய வரத முத்திரையும், மேல் இடக்கரத்தில் சக்தியும், கீழ் இடக்கரத்தில் கடிவலம்பித முத்திரையும் காணப்படுகிறது.

அகன்ற மார்பும், தடித்த ஆடைகளும் எட்டாம் நூற்றாண்டு சிற்பத் திறனுக்குரிய அடையாளங்கள் ஆகும். இச்சிற்பம் எட்டாம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டை ஆட்சி புரிந்த மாபெரும் மன்னன் மாறஞ்சடையன் காலத்ததாக இருக்கலாம்.

**சனீஸ்வரர்**

சுமார் இரண்டரை அடி உயரமுள்ள இச்சிலை கருவறைக்கு நேர் வடக்கில் திருச்சுற்று மாளிகையில் தெற்குமுகமாக உள்ளது.

கரண்ட மகுடமும், வாகு வளையமும், மார்பில் ஆரம் உள்ளிட்ட ஆபரணங்களும் உள்ள இச்சிற்பம் வலது கையானது

அபய முத்திரையையும். இடது கை தொங்கவிட்ட நிலையிலும் உள்ளது. வாயில் இரண்டு கோரைப் பற்கள் காணப்படுகிறது. இவரது வாகனமாகிய காக்கையும் காட்டப்பட்டுள்ளது. இது கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம்.

## முருகன் வள்ளி தெய்வானை

கருவறையின் வடமூலையில் திருச்சுற்று மாளிகையில் கிழக்கு நோக்கி இச்சிற்பம் அமைந்துள்ளது.

கிரீட மகுடமும், நான்கு கரங்களும் கொண்டு, காதில் மகர குண்டலம் அணிந்தவாறு, மயிலின்மீது அமர்ந்த நிலையில் உள்ளது. வலது பக்கத்தில் உள்ள வள்ளி சிற்பமானது இடது கரத்தில் மலரும், வலது கரம் லோல ஹஸ்தத்துடனும் காணப்படுகிறது. தெய்வானையின் வலது கரத்தில் மலரும், இடது கரத்தில் லோல ஹஸ்தமும் காட்டப்பட்டுள்ளது. இவர்களது கைகளில் வளையங்கள் அழகாகக் காணப்படுகின்றன. இதன் காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டாகும்.

## சப்தமாதர்கள்

காலம் — கி.பி. 8 — 9 — ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.

1. பிராமி : மூன்று முகங்கள், நான்கு கரங்கள், பின்னிரு கரங்களில் அக்கமாலை, கெண்டி, கொடியுடன் அமைந்துள்ளது. வாகனம் — அன்னம்.
2. மாகேஸ்வரி : ஜடாமகுடம், நான்கு கரங்கள், பின்னிரு கரங்களில் மழு, மான் காணப்படுகிறது. வாகனம் — ரிஷபம்
3. கௌமாரி : கரண்ட மகுடம், நான்கு கரங்கள், பின்னிரு கரங்களில் வஜ்ரம், அக்கமாலை, கொடியுடன் உள்ளது. வாகனம் — மயில்



4. வைஷ்ணவி : கிரீடம், பின்னிரு கரங்களில் சக்கரம், சங்கு, கொடியுடன் உள்ளது. வாகனம் — கருடன்
5. வாராகி : பன்றி முகம், பின்னிரு கரங்களில் கலப்பை, உலக்கை, கொடியுடன் உள்ளது. வாகனம் — சிங்கம்.
6. இந்திராணி : பின்னிரு கரங்களில் அங்குசம், வஜ்ரம், கொடியுடன் உள்ளது. வாகனம் — யானை.
7. சாமுண்டா : விரிந்த சடை, தலையில் கபாலம், பின்னிரு கரங்களில் சூலம், கபாலம், காதுகளில் பிரேத குண்டலங்கள், கொடியுடன் உள்ளது. வாகனம் — ஆந்தை.

## துவாரபாலகர்கள்

இக்கோயிலில் உள்ள எஞ்சிய பழங்காலச் சிற்பங்களில் இரண்டு துவாரபாலகர்கள் சிற்பங்களும் அடங்கும்.

நமஸ்கார மண்டபத்திலிருந்து கருவறைக்கு நுழையும் வாயிலில் இருபக்கமும் இச்சிற்பங்கள் உள்ளன. கோயில் திருப்பணிக்கு உள்ளாகியபோது இச்சிறப்புமிகு சிற்பங்களை தனியே எடுத்து மீண்டும் பதித்துள்ளனர்.

தலையில் கரண்ட மகுடம், நெற்றியில் பட்டையான அணி, காதில் பத்ரகுண்டலங்கள், கழுத்தில் அழகிய அணிகலன், ஒரே பட்டையான புரிநூல், தோள் வளை, கையில் கடகங்கள், இடுப்பில் ஆடையுடன் அமைந்துள்ளது.

வலது தோளின் பட்டையருகில் நாகம் படமெடுத்த நிலை. அகன்ற விழிகள், வீரப்பற்களுடன் காணப்படுகிறது. வலது கரத்தை மார்பின் குறுக்காக மடக்கி சூட்சும முத்திரையுடன், இடது

கரம் கதையின் மேல் ஊன்றிய நிலையில் உள்ளது. வலது காலை கதையில் பின்புறமாக மடக்கி, இடது காலைத் தரையில் ஊன்றிய நிலையில் இச்சிற்பம் காட்சியளிக்கிறது.

பெரும்பகுதி வலது பக்க துவாரபாலகரை ஒத்துள்ளது. ஆனால் இடது கரம் கதையின் மேலும், வலது கரம் விஸ்மய ஹஸ்தத்திலும் காணப்படுகின்றன.

இடக்காலை கதையின் பின்புறமாக வளைத்து, வலது காலைத் தரையில் ஊன்றிய நிலை. அகன்ற தோள்பட்டைகளும், பட்டையான தடித்த புரிநூலும், கனத்த ஆடைகளும், இயற்கையான அழகும் இச்சிற்பங்கள் கி.பி. 8 (அ) 9 — ஆம் நூற்றாண்டு என்பதற்குச் சான்றாகின்றன.

### மனித உருவங்கள்

கருவறை வாயிலுக்கு முன்புள்ள கொடி மண்டபத்தில் (நமஸ்கார மண்டபம் என்றும் கூறப்படுகிறது) உள்ள தூண்களில் நாயக்கர் கால கைவண்ணங்கள் காணப்படுகின்றன.

குறிப்பாக இங்குள்ள சாமரதாரிகள் சிறப்புற அமைக்கப்பட்டுள்ளன. இதே அமைப்புடைய சாமரதாரிகள் தென்காசி கோயில் கருவறை மண்டபத்தில் காணப்படுவதும் குறிக்கத்தக்கதாகும்.

### இடது புறத் தூணில் உள்ள சாமரதாரி

இடது காலை ஊன்றி வலது காலை சற்று இடதுபுறமாக மடக்கி, விரல் முனைகளைத் தரையில் ஊன்றிய நிலையில் உள்ளது. இடது கை விரல்கள் தொடையின் கீழ் லேசாகப் படிந்த நிலையில், வலது கையில் சாமரம் ஏந்தியவாறு காட்சியளிக்கிறது. விம்மிய மார்பகங்களில் படிந்திருக்கும் முத்தாரம், குழல் ரேகைகளோடு



இடப்புறமாக அமைந்த கொண்டை, தலையில் புல்லகம் (தென்பல்லி வடபல்லி) தொய்யகம், நெற்றிப்பட்டை, மெல்லிய புருவ ரேகைகள், விரிந்த விழிகள், காதில் பவழங்களைக் கோர்த்தமைத்தாற் போன்ற காதணிகள், செவிப்பூ, மூக்கணி, கழுத்தில் சவடி, கொப்பூழ்க்குங் கீழ் மடிப்பு ரேகைகளோடு கால்களில் ஒட்டிய ஆடை, கைகளில் தோள்வளை, சூடகம், விரல்களில் மோதிரங்கள், இடையிலிருந்து மேல் தொடைப்பகுதி வரை ஆடை மேல் தளரக் கிடக்கும் மூன்று அணிகள், கால்களில் பாடகம், சிலம்பு முதலிய அணிகள், தோளில் கிளி ஆகியவை இச்சிற்பத்தின் சிறப்பம்சங்களாகும். இதன் காலம் கி.பி. 18 — ஆம் நூற்றாண்டாகும்.

### வலது சாமரதாரி

இடதுபுற சாமரதாரி போன்றே பொது அமைப்பு இருப்பினும் ஆடை அணிகளில் மாறுபாடுகள் உள்ளன. கழுத்தில் பட்டையான அணி. விம்மிய மார்பில் பெரிய பதக்க மாலை உள்ளது. இடது தோளிலிருந்து வலது தொடை வரை முத்துமாலையானது இவளது இடது கை இடது முன் தொடை முழுவதும் படிந்துள்ளது. [அவளது இடது கை இடது காலின் கீழ்த் தொடையில் லேசாகப் படிந்துள்ளது]. இவளது காதுகளில் பத்ரகுண்டலங்கள், செவிப்பூக்கள் [அவளது காதுகளில் மேலிருந்து கீழாய் சிறியதிலிருந்து பெரிதாய்க் கோர்க்கப்பட்ட பவழ அணி] இவளுக்கு இடைக்கும் மேலிருந்தே ஆடை காட்டப்பட்டுள்ளது. ஆனாலும் கொப்பூழ் தெரியும் வண்ணம் மெல்லிய ஆடையாய் மடிப்பு வரிகளோடு காட்டப்பட்டுள்ளது. கையில் உள்ள வாகுவளையங்களானது எடுப்பான முறையில் அழகுற செய்யப்பட்டுள்ளன. காலணிகளில் மாற்றமில்லை. தோளில் கிளியுடன் அழகுற காட்சியளிக்கிறது.

### யாழ் நங்கை

வலது பக்க சாமரதாரியின் தூணில் கீழ்ப்பகுதியில் இந்த யாழ் நங்கை சிற்பம் உள்ளது. சுமார் இரண்டடி உயரம் உள்ள

இச்சிற்பம் வலது காலை ஊன்றி, இடது காலை வலது பக்கமாக மடக்கி விரல்களைத் தரையில் ஊன்றி நளினத்தோடு நிற்கும் பாவனையில் உள்ளது. வலதுபுறம் சரிந்த கொண்டையில் புல்லகமும், தொய்யகமும் அணிந்து, காதுகளில் பத்ரகுண்டலம், கழுத்தில் சவடி, காறை, முத்தாரம் முதலிய அணிகளுடன் கைகளில் வாகு வளையம், தோள்வளை, முன் கைகளில் சூடகங்களுடன் அழகுறக் காட்சியளிக்கிறது.

மெல்லிய யாழின் கீழ்ப்பகுதியை வலது கையும், மேற்பகுதியை இடது கையும் பிடித்த நிலையில் இடது தோளிலிருந்து வலது இடைவரை நீளும் முத்து மாலையும், இடுப்பின் கீழ் மூன்று மாறுபட்ட தளர்ந்த அணிகள். கீழ் அணியிலிருந்து முழங்கால்வரை மடிப்புமிகு அணிகள் இச்சிற்பத்தை அலங்கரிக்கின்றன.

காலில் பாடகம், சிலம்பு முதலிய அணிகள் உள்ளன. சிறிய சிற்பமாயினும் நிற்கின்ற நடன நளினமும், மெல்லிய இடையும், வீணை தாங்கிய கலை பாவமும், முறுவல் நெளியும் இதழும், இடையொடிந்திடுமோ என அச்சுறுத்தும் பருவச்சுமையும் கலை விழியாளர்களை மிகவம் ஈர்க்கத்தக்கனவாய் அமைந்துள்ளன. இதன் காலம் கி.பி. 17, 18 — ஆம் நூற்றாண்டாகும்.

### நளின மகள்

இடது புற சாமரதாரியுள்ள தூணின் மேற்குப் பகுதியில் ஒரு நளின மகளின் சிற்பம் உள்ளது.

பெரிய மாலையினைக் கழுத்திலிட்டு இருபக்கமும் கைகளால் பிடித்துள்ள பாவனையுடன் இடுப்பிலிருந்து கால்வரை மடிப்போடு கூடிய ஆடையும் விம்மிய மார்புகளில் பதக்க ஆரமும். காதுகளில் பத்ரகுண்டலங்களும் உள்ளன. அடிப்பாதங்கள் கூட



அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. தலையில் கதகளி நடனத்திற்குரிய தலையணி போன்று அணியுள்ளது. காலில் சிலம்பு, தண்டை முதலிய அணிகள் உள்ளன. இதன் காலம் கி.பி. 17, 18 — ஆம் நூற்றாண்டாகும்.

### நாணும் நங்கை

நமஸ்கார மண்டபத்து மூன்றாவது தூணில் இந்த நாணும் நங்கை காட்சியளிக்கிறாள். இத்தோற்றம் இங்குள்ள பிற்காலத்திய தூண்களிலெல்லாம் பல இடங்களில் காணக் கிடைக்கின்றன.

நிர்வாணக் கோலத்தில் அவிழ்ந்த ஆடையை இடது கையால் பிடித்துக்கொண்டு, மூக்கில் வலது கை சுட்டு விரலை வைத்த நிலையில் அமைந்துள்ளது. மார்பில் முத்துமாலை பதக்கமும், இடது புறம் சாய்ந்த கொண்டையும், காதில் பத்ர குண்டலங்கள், முன் கூந்தலில் புல்லகம், தொய்யகம், வாகுவளையம், வளையல், மோதிரம், கால்களில் பாடகங்களுடன் காட்சியளிக்கிறது.

### கண்ணாடிக் காரிகை

இடது புற சாமரதாரிக்கு வடக்கில் ஒரு தூணில் நடன நளினத்தோடு நிற்கும் ஒரு நங்கை கண்ணாடியை இடது கையில் பிடித்துக்கொண்டு வலது கையைப் பின்னால் தூக்கி தலைக்கு மேலிருந்து நடுவிரலால் பொட்டிடும் பாவனை மிகவும் அழகாக உள்ளது.

### முனியின் நடனம்

வலது புற சாமரதாரியுள்ள தூணின் தெற்குப்பக்கம் இச்சிற்பம் உள்ளது. காலை மாறுபட பின்னிவைத்து, உடலை நெளித்து, இடது கையை உயர்த்தி, வலது கையால் இடது முன் கையைப் பிடித்துள்ள நிலையில் உள்ளது.

முனிவரது தோளின் இருபக்கமும் சடையின் நான்கு பிரிவுகள் காட்டப்பட்டுள்ளன. நிர்வாணக் கோலமும், இடையில்

அரைஞாண் கயிறும், விலா எலும்புகளும் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பம் இக்கோயில் மண்டபத்தூண்களில் பல இடங்களில் காணப்படுகின்றன.

## சித்திரசபையில் சில சிற்பங்கள்

குழல்வாய்மொழியம்மனின் பழைய கோயிலை இடித்துவிட்டு நகரத்தார் திருப்பணி செய்தபோது கண்டெடுக்கப்பட்ட சிற்பங்கள் சுமார் 5 அல்லது 6 அடிக்கு மேல் உயர்ந்தவையாக, உடல் பல்வேறு கோணங்களில் வளைந்து முத்தாலும் மணியாலுமான பல அணிகளை அணிந்தவையாகக் காட்சியளிக்கின்றன. இவற்றில் குறவன், குறத்தி முதலிய சிற்பங்கள் எழில் வாய்ந்தவை.

### குறவன்

சுமார் 3 அடி உயரமுள்ள குறவன் போல காட்சியளிக்கும் இச்சிலை தலையில் தலைப்பாகையும், காதில் கடுக்கண், மார்பில் அணிகளும் அமைந்துள்ளது.

### குறத்தி

குறவனுக்குப் பக்கத்தில் குறத்தியின் சிற்பம். இடது தோளில் குடுவை ஏந்தி இடது கரத்தால் மூடியைப்பிடித்து, வலது கையால் பின்னிய சடையைத் தாங்கிய பாவனையில் நளினமாக நிற்கும் பாங்கு அழகாக உள்ளது.

தலையில் நான்கு வரிசையுள்ள முடியலங்காரம், காதுகளில் பத்ரகுண்டலங்கள், இடுப்பிலிருந்து கால்வரை நெளிமிகு ஆடை. விம்மிய மார்புகளில் படிந்த முத்தாரம் ஆகியவை குற்றாலக் குறவஞ்சியின் தோற்றத்தை நினைவுபடுத்துகிறது.

### கொழு ரதி

கதகளி நடனத்திற்குரிய முடியலங்காரம் அதில் காணப்படும். தலையிலும் அணிகள், விம்மிய மார்பில் தவழும் ஆரம், நளினமானக் கால்கள் நடமிடும் பாவனை, நெளிமிகு ஆடை ஆகியவை இச்சிற்பத்தில் சிறப்பான ஒன்று.



வலது கை சிதைந்துள்ளது. காலில் சிலம்பு, மெல்லிய இடை, இதழ்களில் உயிர்ச்சிரிப்பு. காதுகளில் பத்ரகுண்டலம். இடது காலை ஊன்றி, வலது காலை மெல்ல தூக்கி விரல்களால் ஊன்றிய நிலை ஆகியவை இச்சிற்பத்தை அழகுபடுத்துகிறது.

### நடன நங்கை

நான்கு வரிசையுடைய கரண்ட மகுடம் தரித்து, இடது பக்க மூக்கில் மூக்குத்தியும், காதில் பத்ரகுண்டலமும், மெல்லிய கச்சையணிந்த விம்மிய மார்பில் தவழும் முத்தாரமும், இடையிலிருந்து கால்வரை நெளிமிகு ஆடையுடன் உள்ள இச்சிற்பம் அழகாகக் காட்சியளிக்கிறது. இதில் இடது கையை இடுப்பில் வைத்து, வலது கையால் ஒன்று எனக்காட்டும் பாவனையும், நெற்றியில் பொட்டும் காட்டப்பட்டுள்ளது. காலில் தண்டை மற்றும் சிலம்புடன் இச்சிற்பம் உள்ளது.

## மரச் சிற்பங்கள்

ஒரே பகலில் எட்டுத் தேர்களைச் செய்யவல்ல தச்சர்கள் தமிழகத்தில் சங்ககாலத்தில் இருந்தனர் எனப் புறநானூறு கூறுகிறது. அம்மரபு தொடர்ந்து வந்துள்ளது. இதனை தமிழகச் சிற்ப வரலாறு காட்டும். இக்கோயிலில் திரிகூட மண்டபத்திலிருந்து கோயிலுக்குள் நுழையும் வாயிலில் உள்ள மரத்தாலான மண்டபம், கோயிலின் வடக்கு வாயிற் கதவங்கள், சித்திர சபையின் கதவங்கள், தேர்கள் முதலியவற்றில் சிறப்புமிகு மரச்சிற்பங்கள் நிறைந்துள்ளன.

### நுழைவாயில் மண்டபம்

கல்லாலான தூணைச் சுற்றி மரத்தூண்கள் அமைக்கப்பட்டு இச்சிறு மண்டபம் முழுமையும் மரத்தால் செய்யப்பட்டுள்ளது.

முன் இருபக்கங்களிலும் பக்கத்திற்கு ஒன்பது தூண்கள் வீதமும், பின்னிரு பக்கங்களிலும் பக்கத்திற்கு ஐந்து தூண்கள். ஒவ்வொன்றும் ஒவ்வொன்றிலிருந்து மாறுபட்ட அமைப்பில், அழகுற பூவேலைப்பாடுகளோடு செய்யப்பட்டுள்ளன.

### சிறப்பம்சங்கள்

யானை வீரர்களும், குதிரை வீரர்களும் மிகவும் சிறப்பாகச் செய்யப்பட்டுள்ளனர். பழத்தை வாயில் வைத்தவாறு ஒரு குரங்கும், பழத்தை எடுத்துக்கொண்டு கீழே இறங்குவது போன்று ஒரு குரங்கும் சிறப்புற செய்யப்பட்டுள்ளன.

இருபுறமும் உள்ள கொடுங்கைகள் பலாப்பழம் போன்றும் அவற்றைக் கிளி கொத்துவதுபோல் அழகுறச் செய்துள்ளனர்.

இம்மண்டபத்தில் செதுக்கப்பட்டுள்ள புறாக்கள் உண்மையிலேயே புறாக்கள் வந்து அமர்ந்திருப்பது போன்று அவ்வளவு உயிரோட்டமாகக் காணப்படுகின்றன. இரண்டு முன்பக்கத் தூண்களை இணைக்கும் மரத்துண்டின் கீழ்ப்பக்கத்தில் அழகிய கொடிப் பூவேலைகள் காணப்படுகின்றன. இம்மண்டபத்தின் நடுவில் தெய்வச் சிற்பங்கள் அழகுறச் செதுக்கப்பட்டுள்ளன.

விஷ்ணு சிவனிடம் பார்வதியைத் தாரை வார்த்துத் தருவது போன்று மூன்று சிற்பங்களும், அம்பாள் மட்டும் தனியே ரிஷப வாகனத்தில் அமர்ந்துள்ள சிற்பமும், அம்பாளும் சுவாமியும் ரிஷபத்தில் அமர்ந்துள்ள சிற்பமும், ஊர்த்துவ தாண்டவ மூர்த்தியின் சிற்பமும், காளி சிற்பமும், கோலூன்றி இரு கரங்களையும் கோலில் வைத்து மோவாயை அதில் படிய வைத்துள்ளது போன்ற சிற்பமும், கூன் விழுந்த நொண்டியின் சிற்பமும், மகிஷாசுரன் சம்ஹாரம் செய்யும் சிற்பமும் சிறிய அளவினதாக இருப்பினும் சிறப்பாகக் கலையுணர்வோடு செதுக்கப்பட்டுள்ளன.

### கதவுச் சிற்பங்கள்

முதலில் கோயிலின் வாயிற் கதவின் சிற்பங்களைக் காணலாம். வடக்கு வாயிலின் கதவில் 32 கட்டங்களில் சிறிய மரச்சிற்பங்கள் சிறப்புறச் செதுக்கப்பட்டுள்ளன. மேலிருந்து கீழாக நான்கு நான்கு கட்டங்களாய் சிற்ப அமைதிகளைக் காணலாம்.



அ.
1. அய்யனார் மலையில் அமர்ந்துள்ளார். வலது கை அபய முத்திரை. முட்டியிட்டு அமர்ந்துள்ள இடது காலில் இடது கையை வைத்துள்ள நிலை.
2. உற்சவமூர்த்தி. இம்மூர்த்தி அமர்ந்துள்ள பீடத்தை ஐந்து பூதங்கள் தாங்கிய நிலையில் சங்கூதும் அழகு.
3. ரிஷப வாகனத்தில் அம்மையும், அம்மையின் தொடையில் மழலையும், அடியார்கள் வணங்குதல்.
4. ரிஷப வாகனத்தில் சுவாமியும் அம்மையும்.

ஆ.
1. முருகன், வள்ளி, தெய்வானை, அடியார் வணங்குதல்.
2. ஏகபாத முயலகன் தலையில் கையூன்றிய நிலை.
3. விநாயகர், மடியில் தேவியுடன் உள்ளார்.
4. திருமால், அம்மையை சிவனுக்குத் தாரைவார்த்துத் தருதல்.

இ.
1. யானையைத் திருமால் அடக்குதல்.
2. குற்றாலநாதரை ஒரு மன்னன் வணங்குந் தோற்றம்.
3. அடியார்களுக்கு இலிங்க வடிவிலிருக்கும் சுவாமிகள் உருவாய் காட்சி தருதல்.

ஈ.
1. ரிஷிபத்தினி ஆடை விலகிய நிலை. ரிஷிகள் சுற்றி நிற்றல்.
2. கங்காளமூர்த்தி.
3. திருமால் பக்கத்தில் அம்மையும் அப்பனும்.
4. கண்ணன் குழல் ஊதுதல்.

உ.
1. திருமால் பார்வதியை சிவனிடம் தாரை வார்த்துத் தருதல்.
2. இராமரை இலக்குவன் வணங்குதல்.
3. நடராசர் வலது காலை ஊன்றி, இடது காலைத் தூக்கி ஆடும் தாண்டவம்.

4. ஒரு தெய்வ உருவம் ஒரு பெண்ணை சூலத்தால் சம்ஹாரம் செய்வது.

ஊ. 1. திருமால் அரவணையில் பள்ளிகொண்ட காட்சி.

2. உற்சவமூர்த்தி

3. நடனக்காட்சி

4. வில்லேந்திய சிற்பம்.

எ. 1. திருமால் இரு அடியார்கள் வணங்குதல்.

2. பிட்சாடனர்.

3. சிதைந்துள்ளது. (இச்சிற்பம் பெருங்கதவு மூடிய நிலையில் உள்ளே போக அமைக்கப்பட்டுள்ள சிறிய கதவில் அமைந்தது).

4. இரணியன் சம்ஹாரம். சிம்மவதாரம் சிறப்பாகச் சித்தரிக்கப் பட்டுள்ளது.

ஏ. 1. நான்முகன்

2. குறும்பலா அடியில் உள்ள நாதரை மன்னர் வணங்குதல், பக்கத்தில் காவலன்.

3, 4. இரண்டும் சிதைந்துள்ளது.

### சித்திரசபை வாயிற்கதவு

இக்கதவுகளின் 24 கட்டங்களில் சிறிய சிற்பங்களில் கலை நளினங்கள் நன்கு காட்டப்பட்டுள்ளன.

அ. 1. குறும்பலா அடியில் இலிங்க வடிவில் நாதர். இச்சிறிய பலா மரத்திலேயே குரங்கு, கனிகளையும் காட்டியிருப்பது பாராட்டத்தக்கது.

2. அம்பாள் ரிஷப வாகனக் காட்சி.

3. அம்மை அப்பன் ரிஷப வாகனக் காட்சி. சிறிய சிற்பமாயினும் சிறப்பாக உள்ளது.



4. குறும்பலா அடியில் குற்றால நாதர், பாண்டியன் வணங்குதல், இலிங்க வடிவில் உள்ள சுவாமிகள் உருவாக மாறி காட்சியளித்தல்.

ஆ. 1. கண்ணன், ருக்மணி, சத்தியபாமா, கண்ணன் ஒரு காலை ஊன்றி, ஒரு காலை நளினமாகத் தூக்கி வைத்து நடமிடல்.

2. ஆலமர்ச்செல்வன், ஆலமரத்தடியில் பாறையின்மேல் அமர்ந்த நிலை, அடியார் வணங்குதல்.

3. கோயிலில் இலிங்க வடிவில் இறைவன். மன்னன் வணங்குதல், பக்கத்தில் வாளேந்தி நிற்கும் காவலன்.

4. கங்காளமூர்த்தி முகபாவனை மிகவும் அழகு. தட்டினைத் தலையில் ஏந்தி நிற்கும் பூதம், தளிருக்குத் தாவும் மான், நின்ற வண்ணம் ஒரு மங்கை.

இ. 1. ஏகபாத மூர்த்தி.

2. வீரபத்ரர், சூலம் ஒத்துள்ளது, மிதியடி கூடச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது.

3. அம்மை அப்பன் உற்சவ மூர்த்திகள், பீடத்தை சங்கூடும் பூதங்கள் தாங்கி நிற்கின்றன.

4. வேடன் வில்லும் அம்பும் ஏந்தி நிற்கும் நிலை. வாய் பிளந்து முன்காலைத் தூக்கி நிற்கும் புலி.

ஈ. 1. முருகன், வள்ளி, தெய்வானை, மயிலும் செதுக்கப் பட்டுள்ளது.

2. எலி வாகனத்தின் மேல் விநாயகர், விநாயகர் மடியில் மலரேந்திய தேவி, எலி சுமை தாங்கமுடியாத முகபாவனைச் சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது.

3. ஒரு ரிஷியின் உருவம்.

4. பூதநாதர்.

உ. 1. குறும்பலா அடியில் அம்மையும் அப்பனும்.

2. சுவாமியை மன்னன் வணங்கும் காட்சி.

3. அகத்தியர் (திருமாலை சிவனாக்கும் புராணக் கருத்திற்கேற்ப) இலிங்கமாக மாறிய பெருமாள் தலையில் கை வைத்த நிலை.

4. பூதம் சங்கூதுதல்.

ஊ. 1. மரத்தடியில் உள்ள இலிங்க வடிவ இறைவனை இறைவி வணங்குதல்.

2. அம்மை அப்பன்

3. மகாவிஷ்ணு பக்கத்தில் தேவியர்.

4. கண்ணப்ப நாயனார். இலிங்கத்தைக் காலால் கண்ணப்பர் உதைத்தல், கையில் கோல் ஊன்றிய நிலை.

## தேர்ச் சிற்பங்கள்

குற்றாலநாதர் கோயிலுக்கென ஐந்து தேர்கள் உள்ளன. இத்தேர்களில் சில 18 — ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

மூன்றாம் பட்டம் காளத்தியப்பதேவர் என்பவர், சுவாமி தேர், அம்மன் தேர், விநாயகர் தேர், சுப்பிரமணியர் தேர் செய்து கொடுத்தார் எனவும், இதற்கான செலவு 4200 பொன் என தல வரலாறு கூறுகிறது.

நான்கு தேர்களில் முழுமையாகச் சிற்பங்களே இல்லை. பெரிய தேரில் மட்டுமே சிற்பங்கள் உள்ளன. தேர் நிற்கும் இடத்தில் படிகளைக் கொண்ட உயர்ந்த பீடம் அமைக்கப்பட்டுள்ளது. தேர் சுமார் 30 அடி உயரம் இருக்கலாம்.

## சித்திர சபையில் சில சிற்பங்கள்

கல் பீடமும் கற்சுவரும் தவிர இங்கு மற்ற கட்டட அமைப்பு முழுவதும் மரங்களால் ஆனவையே. கருவறையினுள்ளே



மேற்பகுதியில், திருமகள், யோகீஸ்வரர், ஆனைதாண்டவம், உமாதேவி, சரபமூர்த்தி, வீரபத்திரர், கலைமகள், மன்மதன், கணபதி, அர்த்தநாரீஸ்வரர், திருவண்ணாமலையார்(அழல் வடிவில்), சுப்பிரமணியர், கணபதி, ரிஷிகள், மோகினி, ரிஷிகள், சங்கரநாராயணன், இடபாரூடர், நந்தீஸ்வரர், திருக்குற்றாலநாதர், ஸ்ரீநிவாசன், கண்ணப்பர், ஈஸ்வரம் தாளம் போட்டது, புன்னைமரக் கிருஷ்ணன், வேணுகோபாலன், மீனாட்சி திருமணம், ரிஷிபத்தினி, கங்காளநாதர், பத்திரகாளி நடனம், மாறியாடும் பெருமாள், ஊர்த்துவ தாண்டவம், மகாவிஷ்ணு முதலிய சுதைச்சிற்பங்கள் வண்ணம் பூசப்பட்டு அழகுறக் காட்சியளிக்கின்றன.

## தூண் சிற்பங்கள்

குற்றாலநாதர் கோயிலில் மிகவும் பழைய தூண்களாக எஞ்சியுள்ளவை கருவறை முன்மண்டபத்திற்கு நுழையும் வாயிலருகில், திருச்சுற்று மாளிகையின் கீழ்ப்பகுதியில் தெற்கில் இரண்டும், வடக்கில் இரண்டுமாய் உள்ளன. இவற்றில் மாறஞ்சடையன் காலத்தைய வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள்ளன.

இத்தூண்களில் செதுக்கப்பட்டுள்ள அன்னச்சேவலின் சிற்பங்கள் அழகாக உள்ளன. பூவேலைப்பாடுகளும் சிறப்புற அமைந்துள்ளன.

கருவறையின் அதிட்டானத்தின் மேலுள்ள சுவர்ப்பகுதியில் உள்ள அரைத்தூண்களில் பெரிய தூண்கள் முப்பட்டையாகச் செதுக்கி, பூவேலைப்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. சிறிய தூண்களில் சில உருளை அமைப்பில் செதுக்கப்பட்டு, பூவேலைப்பாடுகள் அழகுற செய்யப்பட்டுள்ளன.

கருவறை முன்மண்டபத்தில் உள்ள தூண்கள் ஒரு பெரிய தூணும், ஒரு சிறிய தூணும் சேர்ந்தமைந்த நிலையில் ஒரே கல்லில் அமைக்கப்பட்டுள்ளன. எட்டு தூண்கள் உள்ளன. இடதுபுற இரண்டாவது தூணில் முருகனின் சிற்பம் உள்ளது.

**நமஸ்கார மண்டபத் தூண்கள்**

இம்மண்டபத்து இடதுபக்கமுள்ள முதல் தூணின் வடக்குப்பகுதியில் வீரத்தோடு மீசையை முறுக்கிவிட்டு வலது கையில் கதையும், இடது கையை முட்டியில் ஊன்றிய நிலையிலும் நிற்கின்ற சிற்பம் பார்ப்போரை வியக்க வைக்கிறது.

இத்தூணின் கீழ்ப்பகுதியில் உத்ராட்ச மாலை அணிந்து அரைஞாண் கயிற்றைச் சுருக்கிக் கட்டி அதில் கோவணம் அணிந்து, நின்ற நிலையில் வணங்கும் அடியார் சிற்பமும், இடது புறத் தூணின் நடுவில் காளியா கிருஷ்ணன் பாம்பின்மேல் நிற்பதுபோல் உள்ள இதர பிற முக்கியச் சிற்பங்களாகும்.

**வலது பக்க சாமரதாரியுள்ள தூணில்**

மேற்கில் : வில்லும் அம்பும் ஏந்திய இராமரின் சிற்பம்.

தெற்கில் : காலை மாறுபட வைத்து உடலை நெளித்து விசுவாமித்திரர் பாவனையில் ஒரு முனிவர் சிற்பம்.

கிழக்கில் : யாழ் நங்கை.

**திருமலை நாயக்கர் சிற்பமுள்ள தூணில்**

கிழக்கில் : கத்தியேந்திய காவல் வீரன்.

தெற்கில் : சிறிய வடிவில் வணங்கி நிற்கும் பெண்.

மேற்கில் : வணங்கிய நிலையில் ஒரு பெண்.

தூண் நடுவில் : மேற்கு — சிறிய உருவில் நடராசர்.

தெற்கு — ஐயனார்.

கிழக்கு — கதையேந்திய உருவம்.



**வலதுபுற நான்காவது தூணில்**

மேற்கில் : வணங்கும் தலைப்பாகையுடைய அடியார்.

தெற்கில் : ஐந்தலை நாகத்தின் படத்திற்குங்கீழ் அமைந்துள்ள சிவலிங்கம்.

கிழக்கில் : பிட்சாடனர், மானுக்குத் தளிரூட்டுதல், தட்டேந்திய பூதம்.

**வலது புற ஐந்தாவது தூணில்**

மேற்கில் : வணங்கும் அடியார். மான்களை ஒன்றின் மேல் ஒன்றாய் இரு காலை ஊன்றி, மேல்காலைத் தூக்கி நிற்கும் பாவனையில் பூவேலைப்பாடு.

**இடது புற இரண்டாவது தூண்**

மேற்கு : வணங்கும் முனிவர். விரிந்த சடை, தாடி, மழுவையும் மானையும் பின்னிரு கைகளிலும் ஏந்தி மத்தளம் இசைக்கும் சிற்பம், கால் விரிந்த நிலை.

தூணின் நடுவில் கிழக்கில் : சிவலிங்கத்திற்குப் பசு பாலூட்டுதல்.

தூணின் மேற்பகுதியில் : சிறிய யானையின் சிற்பம்.

**இடது புற மூன்றாவது தூண்**

மேற்கில் : ஐந்தலை பாம்பின் கீழ் சடைகளைச் சுருட்டிக் கட்டிய முனிவர் தாடியுடன்.

வடக்கில் : விசுவாமித்திரர் தோற்றத்தில் ஒரு முனிவர்

**இடது புற நான்காவது தூண்**

கிழக்கில் : வாலைச் சுருட்டி வைத்து அதன்மேல் அநுமன் அமர்ந்த நிலை.

முடியை சுருட்டிக் கட்டிய நிலையில், தாடி மீசையோடு கைகளில் கத்திகளை ஏந்தி நடமிடும் பாவனையில் ஒரு சிற்பம்.

மேற்கில்: அ. கையில் கரும்போடு கிரீட மகுடம், மீசையுடன் மன்மதன். இதற்கு மேற்குப் பக்கமுள்ள தூணில் எதிராய் நாணும் நங்கையுள்ளாள். இதனை இங்கு ரதி என்கின்றனர்.

ஆ. வணங்கிய நிலையில் இடுப்பில் கத்தியோடு ஒரு சிற்பம்.

கிழக்கில்: வணங்கும் பாவனையில் பெண் சிற்பம்.

## கொடிமரத்தின் கீழ்ப்பகுதியில் உள்ள நமஸ்கார மண்டபம்

இம்மண்டப பீடத்தை ஐந்தலை நாகம், பூதவரிகள், யானைகள் முதலியன தாங்கி நிற்பது போன்று அமைக்கப் பட்டுள்ளது. ஆமையின்மீது அமைந்துள்ளது போன்ற அமைப்பைக் காட்ட ஆமையின் பாதங்கள் நான்கு பக்கமும் காட்டப்பட்டுள்ளன.

## கருவறையின் கிழக்கு வாயிலிலிருந்து சற்று வடக்கிலுள்ள மண்டபத்தில்

சிறு சிறு தூண்களானது இசைத்தூண்கள் அமைப்பில் அமைக்கப்பட்டுள்ளன. இத்தூண்களின் பக்கத்தில் உள்ள பெரிய தூணில் கொடிப்பெண், கண்ணாடி பார்த்துப் பொட்டிடும் பெண் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

இரண்டாவது தூணில் சிம்மம், விநாயகர் முகமும் புலியுடலும் கொண்ட உருவின் கையில் கத்தி உள்ளது.

கருவூல அறை சுவரில் பாண்டியர்கால யாளி வரிகள் தென்படுகின்றன.



## கருவறைக்கடுத்த முன்மண்டபத் தூண்கள்

இம்மண்டபத் தூண்களில் பூங்கொடிச் சிற்பங்கள் மிக அழகாக உள்ளன. இம்மண்டபத் தூண்களில் திருமால் பார்வதியை சிவனிடம் தாரை வார்த்துத் தருதல், அம்மை தனியே அமர்ந்த நிலை, இறைவன் இறைவி ரிஷப வாகன காட்சி, இறைவனும் இறைவியும் மலையில் அமர்ந்திருக்க இராவணன் அம்மலையைத் தூக்குதல், இரண்ய சம்ஹாரம், வலது காலை ஊன்றி இடது காலை எடுத்து ஆடும் ஆடல்வல்லான், பக்கத்தில் தேவி, இடதுகாலை ஊன்றி வலது காலைத் தூக்கி மாறியாடிய நடராசர், சந்திரசேகரமூர்த்தி, இராமரிடம் அநுமன் பணிவுடன் நிற்றல், முருகன் வள்ளியொடு வேல்கொண்டு நிற்றல், விநாயகர், ஐயனார் முதலிய சிற்பங்கள் உள்ளன. அளவில் சிறியவையேயாயினும் கலையில் பெரியவையாய் அமைந்துள்ளன.

## திரிகூட மண்டபத் தூண்களில்

வணங்கும் அடியார்களின் சிற்பங்கள் செதுக்கியும் செதுக்காமலும் விடப்பட்டுள்ளன.

பூங்கொடிகள், தவம் செய்யும் முனிவர்கள், குறும்பலா நாதர், அநுமன் வாய் பொத்தி நிற்றல், மன்னன் வணங்கிய தோற்றம். அநுமன் வாலைச் சுருட்டி அதன்மேல் அமர்ந்த நிலை, நடன நங்கை, பன்றியைக் கௌவிய நாகம், அநுமன் கல்லை தலைக்கு மேல் தூக்கி நிற்றல், அநுமன் ஒரு கையை தொடையில் ஊன்றி ஒரு கையை உயரே தூக்கி நிற்றல், ஒற்றைக் காலில் முனிவர் தவம், வீரனின் நடனம், அகத்தியர் திருமாலை சிவனாக்குதல், இம்மண்டபத்து வடகிழக்கில் இரு தூண்களில் பெரிய உருவில் இரு மன்னர்கள் வணங்கும் தோற்றம், பக்கத்தில் வாள் கேடயத்தோடு காவலன், கண்ணாடி பார்த்துப் பொட்டு வைக்கும்

நங்கை, பலாக்கனிகள் மிக்க மரத்தின் கீழ் சிவலிங்கம் முதலிய பல்வேறு சிற்பங்கள் பல்வேறு வடிவில் இருப்பினும் அழகு குறைந்து காணப்படுவதை குறிப்பிடத்தான் வேண்டும். இவை மிகவும் பிற்காலத்ததாய் உள்ளன.

## குழல்வாய்மொழி அம்மன் கோயில்

இக்கோயிலில் கருவறை முன்னுள்ள தூண்கள் 16 பட்டைகளாய் செதுக்கப்பட்டுள்ளன. மேற்பகுதியில் தாமரையிதழ்கள் விரிந்த நிலையில் பளிங்கு போன்ற வழவழப்புடன் காட்சியளிக்கிறது.

## தந்தச் சிற்பங்கள்

கருவூல மண்டபத்திலுள்ள தந்தப் பல்லக்கை கலையின் சிகரமென்றே கூறவேண்டும் என்கிறார் தல வரலாற்றாசிரியர். இப்பழங்கால பல்லக்கு நாயக்கர் காலத்ததாக இருக்கலாம். இதில் விநாயகர், முருகன், தனித்தனி ரிஷப வாகனத்தில் சுவாமி, அம்மன், நடராஜர், காளி, வேணுகோபாலர் அனந்தசயனம், மகாமூர்த்தி, துவாரபாலகர்கள் ஆகிய சிற்பங்கள் உள்ளன.

இவை தவிர தந்தத் தகட்டின் மேல் பல வண்ணங்கள் கொடுத்து குழல்வாய்மொழியம்மையுடன் குறும்பலாநாதர், வியாக்யானத் தட்சிணாமூர்த்தி, பிட்சாடனர், அர்த்தநாரீஸ்வரர், வீரபத்ரர், ஒரு பக்கம் சிம்ம முகமும், மற்றொரு பக்கம் ரிஷப முகமும் கொண்ட வாகனத்தில் தேவி, சாஸ்தா (பூர்ண புஷ்கலையுடன்), பிட்சாடனர், கண்ணப்பர், மார்க்கண்டர், யானை ஆதிமூலமென்றழைக்க முதலை வாயினின்று விடுவித்த ஆதிமூலம், அர்ச்சுனன் வில் வித்தை, இராமர் சீதா பிராட்டியாரைத் திருமணம் செய்யுமுன் வில் முறித்தல், காளிங்க நர்த்தனம், சூரசம்ஹாரம், நரசிம்மமூர்த்தி இன்னும் பல உருவங்கள் ஓவிய அமைப்பில் கண்ணைக் கவரும் வண்ணம் செதுக்கப்பட்டுள்ளன. செடி கொடிகளில் அன்னம், யாளி, குரங்கு, கிளி, யானை முதலிய உருவங்கள் ஏராளமாக உள்ளன.



பல்லக்கின் உட்பக்கம் நடராசர், சிவகாமியம்மன் (பதஞ்சலி வியாக்ரபாதர், பிரம்மா, விஷ்ணு உட்பட) ஒரு பக்கமும், எதிர்ப்பக்கத்தில் காளி, பைரவர், வீரபத்ரர் உருவங்கள் தந்தத்தில் இழைக்கப்பட்டு பதிக்கப் பெற்றிருக்கின்றன. இதுபற்றி தல வரலாற்று ஆசிரியர் "பூவென்றால் தாமரைப்பூ, பல்லக்கு என்றால் திருக்குற்றாலநாதர் ஏறி வரும் தந்தப்பல்லக்கே" என்று கூறி பெருமைப்படுகிறார்.

## செப்புத் திருமேனிகள்

கி.பி. 9 முதல் 11—ஆவது நூற்றாண்டு வரையிலுள்ள காலத்தின் சிற்பங்கள் எண்ணிக்கையில் பெருகிவிட்ட போதிலும் தரத்தில் முந்தைய காலகட்டத்தினுடையதைப் போன்று சிறந்ததாக இருக்கவில்லை. இக்கட்டத்தின் சிற்பங்கள் படிப்படியான வீழ்ச்சிக்கான அறிகுறிகளைப் புலப்படுத்திய போதிலும் அப்போது இருந்த வெண்கல வார்ப்புக்கலை பூரணமான நிலைக்கு உயர்ந்துவிட்டது போலத் தோன்றுகிறது.

இக்கலை குறிப்பாக தமிழ்நாட்டில் மிகவும் புகழ்ப்பெற்று இருந்தது. சோழ மன்னர்கள் இதற்கு உற்சாகமிக்க ஆதரவளித்தனர். இக்கலையின் அசாதாரண வளர்ச்சிக்கு மற்றொரு காரணமும் இருந்தது. கோயிற் விழாக்களில் இறைவனின் திருவீதி உலாக்கள் பேரிடம் பெற்றன. திருவீதி உலாக்களுக்கு நிலையாக எழுந்தருளுவிக்கப்பட்ட மூல தெய்வங்கள் பயன்படுத்த இடம் தரவில்லை. எனவே செப்புப் படிமங்களின் தேவை மிகுதியாயிற்று.

விலைமதிப்பில்லா இச்செப்புக்கலை சங்ககாலந் தொட்டே வளர்ந்து பல்லவர் காலத்தில் மெல்ல வளர்ந்து சோழர் காலத்தில் உச்சநிலையை எட்டியது.

இச்சிறப்புமிகு செப்புத் திருமேனிகள் குற்றாலநாதர் கோயிலில் ஏராளமாக உள்ளன. பிற்காலத்தவையாகப் பெரும்பாலும் இருந்தாலும் கலைச்சிறப்புமிகு செப்புத் திருமேனிகளும் இருக்கத்தான் செய்கின்றன. இவைபற்றி ஈண்டு காணலாம்.

**சோமாஸ்கந்தர்**

அம்மையப்பனாய் அமர்ந்து அருகே பிள்ளை முருகன் அமர்ந்திருக்கிறான். இறைவன் பெருமிதமான தோற்றத்துடன் ஜடாமகுடம் தரித்து, காதுகளில் மகர பத்ரகுண்டலங்கள் அணிந்து, கழுத்தணிகளுடன் தோள்களில் அழகு வாகுமாலைகள் காணப்படுகின்றன. மார்பில் உதரபந்தம், புரிநூல் உள்ளன.

நான்கு கரங்களில் மேலிரு கரங்களில் மழு, மான் ஏந்தி, கீழிரு கரங்களில் ஆகூய, சிம்மகரண முத்திரைக் காட்டுகிறார். இடையில் சிறிய ஆடை காணப்படுகின்றது. வலக்காலைத் தொங்க விட்டும், இடக்காலை மடித்தும் வைத்திருக்கிறார். உமையன்னை அருகில் அமர்ந்திருக்கிறார். அவர் ஜடாமகுடம் அணிந்திருக்கிறார். ஸ்தான சூத்ரமும் மாலைகளும் காணப்படுகின்றன. தோள்களில் வாகு மாலைகள், கேயூரம் காணப்படுகின்றன. இரண்டு கரங்களில் வலக்கரம் கடக முத்திரையிலும், இடக்கரம் சிம்மகரண முத்திரையிலும் உள்ளன. நடுவில் முருகன் சிறிய வடிவில் அழகுற அமர்ந்திருக்கும் கோலம் சிறப்பாக உள்ளது.

இது சுமார் 11 — ஆம் நூற்றாண்டுச் செப்புத் திருமேனியாக இருக்கலாம். வழிபாட்டிற்குப் பயன்படுத்தப்படாமல் கருவூல அறையில் இச்சிலை பாதுகாக்கப்பட்டுள்ளது.

**ஆடல் வல்லான்** (சித்திர சபை சபாபதி)

ஆடுகின்ற அண்ணலாக விரிந்த சடையுடன், ஜடாமகுடம் தரித்து, மேல் வலக்கையில் உடுக்கையும், இடக்கையில் அனலும் தாங்கி, உலகைக் காக்கும் பரம்பொருளாக நிற்கும் இறைவன்



கீழ் வலக்கையை அபய முத்திரையிலும், இடக்கையை வேழ முத்திரையிலும் கொண்டு இடது பாதம் தூக்கி ஆடும் நடராசனாகக் காட்சியளிக்கிறார்.

வலக்காலின் கீழ் அறியாமையின் உருவமான முயலகன் விழிகள் பிதுங்க, ஒரு காலைச் சற்றே தூக்கியவண்ணம் தலையை உயர்த்திப் பார்க்கும் நிலையைக் காண்கிறோம். பரப்பிரம்மத்தைச் சுற்றிலும் பிரபை மண்டலம் உள்ளது. இதில் 25 பிரபைகள் காணப்படுகின்றன.

உயரம் 103 செ.மீ. அகலம் 90 செ.மீ. உள்ள இத்திருமேனி சுமார் கி.பி. 11, 12 — ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

தமிழகம் தோற்றுவித்த சிறந்த கலைப் படைப்புகளில் ஆடல்வல்ல பெருமானாக நடராசமூர்த்தியாக உள்ள உருவே உலகோர் அனைவரின் கருத்தையும் கவர்ந்திருக்கிறது. ஆனந்தத் தாண்டவம் புரியும் ஆடவல்ல பெருமானின் செப்புத் திருமேனியில்லாத கோயில்களே தென்னகத்தில் இல்லை எனுங் கருத்தும் இங்கே எண்ணத்தக்கது.

**மனோன்மணி அம்மை**

திரிபங்க நிலையில் காணப்படுகிறார். தலையில் கரண்ட மகுடம் தாங்கி காதுகளில் மகர குண்டலங்கள் அணிந்திருக்கிறார். வலக்கரம் கடக முத்திரையிலும், இடக்கரம் லோல முத்திரையிலும் இருக்கிறது. மார்பில் அணிகளுடன் புரிநூல் காணப்படுகிறது.

தோள்களில் வாகு மாலைகளும், வாகு வளையங்களும் உள்ளன. இடையில் நீண்ட ஆடை காணப்படுகின்றது. உயரம் 91 செ.மீ. அகலம் 22 செ.மீ. அளவுள்ள இப்படிமத்தின் காலம் கி.பி. 11, 12 — ஆம் நூற்றாண்டாகும்.

**தனி அம்மன்**

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. தலையில் ஜடாமகுடமும், காதுகளில் மகர குண்டலங்கள், தோள்களில் வாகுமாலைகள்,

இடையிலிருந்து கீழ்கால் வரை ஆடை. வலது கையில் மலர் தாங்கி, இடது கையைத் தொங்கவிட்ட திரிபங்க நிலையில் உள்ளது. இது கி.பி. 11, 12 — ஆம் நூற்றாண்டுச் சிற்பமாகும்.

### சத்தியபாமா

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலையில் திரிபங்க அமைப்பில் இச்சிற்பம் உள்ளது. தலையில் கரண்ட மகுடம், காதுகளில் மகர குண்டலங்கள், தோள்களில் வாகுமாலைகளும், கேயூரங்களும் காணப்படுகின்றன. வலக்கையில் நீலோற்பவ மலர் காணப்படுகின்றது. இடக்கை லோல முத்திரையில் உள்ளது. இடையிலிருந்து பாதம் வரை தொங்கும் ஆடையும், கால்களில் சிலம்பும் காணப்படுகிறது. இதன் உயரம் 71 செ.மீ. அகலம் 19 செ.மீ. ஆக உள்ளது. இதன் காலம் சுமார் 13 — ஆம் நூற்றாண்டு.

### மாணிக்கவாசகர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலையில் இருக்கிறார். தலையிலும் கழுத்திலும் உருத்திராட்ச மாலை அணிந்துள்ளார். வலக்கை சின் முத்திரையிலும், இடக்கை புத்தக முத்திரையிலும் உள்ளது. இடுப்பில் சிற்றாடை உடுத்து, மலர்ந்த முகத்துடன் அறிவின் சுடராகக் காட்சியளிக்கிறார். இச்செப்புப் படிமத்தின் உயரம் 53 செ.மீ. அகலம் 14 செ.மீ. காலம் சுமார் 13 — ஆம் நூற்றாண்டு ஆகும்.

### திருநாவுக்கரசர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலையில் உள்ளார். கழுத்தில் மணி மாலை, கைகள் அஞ்சலி முத்திரையில் காணப்படுகிறது. உழவாரப் படையை ஏந்தியிருக்கிறார். இடையிலிருந்து முழங்கால் வரையிலான ஆடை உள்ளது. படிமத்தின் உயரம் 54 செ.மீ. அகலம் 14 செ.மீ. காலம் சுமார் 13 — ஆம் நூற்றாண்டு.

### திருஞானசம்பந்தர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. வலது கையையும் காலையும் சற்று தூக்கி ஆடும் நிலை.



தலையில் ஜடா மகுடம், காதுகளில் பத்ர குண்டலம், தோள்களில் வாகுமாலைகள், மார்பில் சன்ன வீரம், இடையில் அரைஞாண் கயிறு, கால்களில் பாத வளையங்களும், சிலம்பும் தூக்கியாடும் பாதத்திற்கு ஒலி சேர்ப்பனவாக உள்ளன. இதன் உயரம் 57 செ.மீ. அகலம் 32 செ.மீ. காலம் சுமார் கி.பி. 13 — ஆம் நூற்றாண்டு.

### காரைக்காலம்மையார்

பத்ம பீடத்தில் அமர்ந்த நிலை. இரண்டு கரங்கள் முறையே வலக்கரத்தில் மலரேந்தியும், இடக்கரம் புத்தகத்தைக் கொண்டும், இடக்காலை மடித்தும், வலக்காலை மடித்து மேனோக்கிய நிலையிலும் உள்ளன.

மார்பில் உருத்திராட்ச மாலை, கைகளிலும் மாலைகள் காணப்படுகின்றன. மார்பு எலும்புக்கூடாகவும், வயிறு குழிந்தும் காணப்படுகின்றன. இதன் உயரம் 27½ செ.மீ. அகலம் 17 செ.மீ. காலம் கி.பி. 13, 14 — ஆம் நூற்றாண்டு.

### கங்காளநாதர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற திருக்கோலத்தில் காணப்படும் கங்காளரைச் சுற்றிலும் திருவாசி காணப்படுகிறது. இரண்டு மனித உருவங்கள் அதைத் தாங்கி நிற்பதுபோல் காட்சியளிக்கின்றன. திருவாசி நன்கு அலங்காரங்களுடன் காட்சியளிக்கிறது.

தலையில் ஜடாமகுடத்துடன் பிறை காணப்படுகிறது. காதுகளில் மகர குண்டலங்கள் அணிந்திருக்கிறார். கழுத்தில் நிறைய அணிகள் உள்ளன. தோள்களில் வாகுமாலை உள்ளது. நான்கு கரங்களுடன், கீழிரு கரங்கள் உடுக்கை அடித்துக் கொண்டும், மேல் வலக்கரம் மானுக்குத் தளிர் கொடுத்துக் கொண்டும் உள்ளது.

இடுப்பில் கடி சூத்திரத்துடன், முழங்கால் வரை ஆடை உள்ளது. கால்களில் பாதக்குறடுகள் உள்ளன. வலக்கரத்தின் அருகே மான் தளிரைப் பெறும் ஆர்வத்தில் முன்னிரு கால்களைத் தூக்கிக் கொண்டும், பின்னிரு கால்களை நிலத்தில் ஊன்றிக் கொண்டும் இருக்கிறது. கங்காளரின் இடப்புறம் குள்ளபூதம் தட்டேந்தி பிச்சைக்குப் போகத் தயாராக நின்றிருக்கிறது. உயரம் 61 செ.மீ அகலம் 29 செ.மீ. காலம் கி.பி. 13, 14 — ஆம் நூற்றாண்டு.

## தெய்வானை

பத்ம பீடத்தின் மேல் திரிபங்க நிலையில் நின்ற கோலம். தலையில் கரண்ட மகுடமும், காதுகளில் பத்ர குண்டலங்களும் காணப்படுகிறது. கழுத்தில் அணிகளும், தோள்களில் வாகு வளையங்களும், கேயூரமும் உள்ளன.

இடையில் கடி சூத்திரத்தோடு, நீண்ட ஆடையணிந்து பாதச்சிலம்புகளுடன் காட்சியளிக்கிறார். இடக்கையில் மலரேந்தி, வலக்கையைத் தொங்கவிட்டிருக்கிறார். உயரம் 48 செ.மீ. அகலம் 11 செ.மீ. காலம் கி.பி. 13, 14 — ஆம் நூற்றாண்டு.

## வள்ளி

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை, தலையில் ஜடாமகுடம், காதுகளில் மகர குண்டலங்கள், வாகுவளையங்கள், கேயூரம், வளையல் அணிந்து வலக்கையில் மலரேந்தி, இடக்கையை எழிலாகத் தொங்கவிட்டிருக்கிறார். ஸ்தான சூத்ரங்கள் காணப்படுகின்றன. நீண்ட ஆடை அணிந்திருக்கிறார். உயரம் 47 செ.மீ. அகலம் 12 செ.மீ. காலம் கி.பி. 13, 14 — ஆம் நூற்றாண்டு.

## சண்டேஸ்வரர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை, இரு கரங்கள் அஞ்சலி முத்திரையில் உள்ளன. தலையில் ஜடாமகுடம், காதுகளில் பத்ர குண்டலங்கள், தோள்களில் வாகுமாலைகள், கேயூரங்கள், கைகளில் கடகங்கள், கழுத்தில் அணிமாலைகள், மார்பில் புரிநூல், இடையில்



முழங்கால்வரை ஆடை, ஆடையில் கடி சூத்திரம், கால்களில் பாதவளையங்கள் காணப்படுகின்றன. உயரம் 60 செ.மீ. அகலம் 14½ செ.மீ. காலம் கி.பி. 15, 16 — ஆம் நூற்றாண்டு.

## உற்சவ விநாயகர்

பத்ம பீடத்தில் நின்ற நிலை, நான்கு கரங்கள், வலது பின்கரத்தில் சூலம், இடது பின்கரத்தில் பாசம், வலது முன்கரத்தில் தந்தம், இடது முன்கரத்தில் மோதகம் உள்ளன. தலையில் கிரீட மகுடமும், கழுத்தில் மாலைகளும் காணப்படுகின்றன. தோள்களில் வாகுமாலைகள், இடையில் உதரபந்தம், மார்பில் புரிநூல், இடையில் சிறிய ஆடை, ஆடையில் கடி சூத்திரம் உள்ளது. துதிக்கை மோதகத்தின் மேல் அமைந்துள்ளது. உயரம் 60½ செ.மீ. அகலம் 33 செ.மீ. காலம் சுமார் 16 — ஆம் நூற்றாண்டு.

## அகத்தியர்

பத்ம பீடத்தின் மீது நின்ற நிலையில் காணப்படுகிறார். தலையில் தலைப்பாகை உள்ளது. குறுந்தாடி, மீசையும் உள்ளது. மார்பில் பட்டையான புரிநூல், இடக்கையில் ஏடு ஏந்தி, வலக்கையைத் தொங்கவிட்டிருக்கிறார். இடையில் நீண்ட ஆடை உள்ளது. உயரம் 56 செ.மீ. அகலம் 16 செ.மீ. காலம் கி.பி. 17 — ஆம் நூற்றாண்டு.

## சேரமான் பெருமாள் நாயனார்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. இரண்டு கைகள் அக்னி முத்திரையில் உள்ளன. தலையில் கிரீட மகுடம், காதுகளில் மகர குண்டலங்கள், தோள்களில் வாகுமாலைகள், கேயூரங்கள் உள்ளன. மார்பில் புரிநூல் காணப்படுகின்றது. இடையிலிருந்து பாதம் வரை நீண்ட ஆடை. உயரம் 63 செ.மீ. அகலம் 19 செ.மீ. காலம் கி.பி. 17, 18 — ஆம் நூற்றாண்டு.

### அதிகார நந்தி

பத்மாசனத்தின் மேல் நின்ற நிலை. நான்கு கரங்கள், மேல் வல இடக்கரங்களில் மழு, மான் ஆகியவையும் கீழ் இரு கரங்கள் அஞ்சலி முத்திரையுடனும் உள்ளது. தலையில் ஜடாமகுடம், காதுகளில் மகர பத்ர குண்டலங்கள், கழுத்தில் அணிகள், தோள்களில் வாகு மாலைகள், கைகளில் கேயூரங்கள் மற்றும் வளையங்கள் உள்ளன. இடையில் முழங்கால் வரையிலான ஆடை, கடி சூத்திரமும் உள்ளது. கால்களில் பாத வளையங்கள் உள்ளன. உயரம் 56 செ.மீ. அகலம் 21 செ.மீ. காலம் கி.பி. 15 — ஆம் நூற்றாண்டு.

### ரிஷபாந்திகர்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. தலையில் ஜடாமகுடம், தோள்களில் வாகுமாலைகளும், கேயூரங்களும், கைவளையங்களும் உள்ளன. தோளில் அணிகள். மார்பில் புரிநூல், உதரபந்தம் காணப்படுகின்றன.

இரண்டு கரங்கள். வலக்கரம் தொங்கவிட்ட நிலையிலும் இடக்கரம் ரிஷபத்தின் மேல் இருப்பது போன்ற பாவனையிலும் இருக்கின்றன. இடுப்பில் சிறிய ஆடை காணப்படுகிறது. காலில் பாத வளையங்களும், சிலம்பும் உள்ளன.

### செண்பகவல்லி

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. தலையில் ஜடாமகுடம், காதுகளில் பத்ர குண்டலங்கள், தோள்களில் வாகுமாலைகள், கேயூரங்கள் உள்ளன. நான்கு கரங்களில் சூலம், கத்தி, கபாலம், ஸ்தான சூத்ரம் காணப்படுகிறது. இடையில் நீண்ட ஆடை, சுற்றிலும் அலங்கரிக்கப்பட்ட திருவாசி காணப்படுகிறது.

### சித்திரசபை சிவகாமி

பத்ம பீடத்தின் மேல் திரிபங்க நிலையில் நின்ற நிலை. தலையில் கரண்ட மகுடம் காணப்படுகிறது. இரண்டு கைகளில் வலக்கையில் நீலோற்பவ மலர் தாங்கியும், இடக்கையைத்



தொங்கவிட்டும் காணப்படுகிறார். மார்பில் ஸ்தானசூத்திரம் உள்ளது. இடையில் பாதம் வரை நீண்ட ஆடை காணப்படுகிறது. இச்சிற்பத்தைச் சுற்றிலும் அழகிய திருவாசி உள்ளது.

### சந்திரசேகரர்

பத்ம பீடத்தில் நின்ற நிலை, சுற்றிலும் திருவாசி, தலையில் ஜடாமகுடம், காதுகளில் மகர பத்ர குண்டலங்கள் உள்ளன. நான்கு கரங்களில் மழு, மான், வரதம், சிம்மகரணம் முத்திரைகள் காணப்படுகின்றது.

கழுத்தில் மாலைகளும், மார்பில் புரிநூல், உதரபந்தம், இடையில் முழங்கால் வரையிலான ஆடையில் கடிசூத்திரம் உள்ளது. உயரம் 37 செ.மீ. அகலம் 15 செ.மீ.

### உமாபதி

இடது பாதம் தூக்கி ஆடும் நடராசப் பெருமானின் ஜடாமகுடமும், சுருண்டு பரந்த கூந்தலும், காதுகளில் மகர, பத்ர குண்டலங்களும், மார்பில் புரிநூலும், கழுத்தணிகளும், உதரபந்தமும் அழகுறக் காட்சி தருகின்றன. உயரம் 82 செ.மீ. அகலம் 55 செ.மீ.

### குற்றாலநாதர் (சோமாஸ்கந்தர்)

பிற்காலத்தைச் சேர்ந்த இச்சிற்பத்தில் சிவபெருமான், உமையாள் மற்றும் முருகன் ஆகியவை அமர்ந்த நிலையில் காட்டப்பட்டுள்ளது. இறைவன் தலையில் ஜடாமகுடமும், காதுகளில் மகர, பத்ர குண்டலங்களும், தோள்களில் வாகு மாலைகளும், கேயூரமும் காணப்படுகின்றன. மார்பில் புரிநூலும், உதரபந்தமும் உள்ளன. இடையில் சிறிய ஆடை, நான்கு கரங்களில் மழு, மான், வரதம், அபயம் முத்திரைகள் உள்ளன. கால்களில் பாத வளையங்களும், சிலம்பும் காணப்படுகிறது. வலக்காலைத் தொங்கவிட்டும், இடக்காலை மடித்தும் வைத்திருக்கிறார்.

உமையம்மை தலையில் ஜடாமகுடம் காணப்படுகிறது. கழுத்தில் நிறைந்த அணிகளும், வாகுவளையங்களும், கேயூரமும் காணப்படுகின்றன. இரு கரங்களில் கடக, சிம்ம கரண முத்திரை காணப்படுகிறது. இடக்காலைத் தொங்கவிட்டும், வலக்காலை மடித்தும் வைத்திருக்கிறார். பாதம் வரை நீண்ட ஆடை உள்ளது. இருவருக்கும் நடுவே முருகன் ஜடாமகுடம் தரித்து, அபய, வரத ஹஸ்தம் காட்டி, வலக்காலை மடித்து மேல் நோக்கியும், இடக்காலை மடித்தும் வைத்திருக்கிறார்.

| | |
|---|---|
| ஆடல் வல்லான் | : உயரம் 65 செ.மீ. அகலம் 32 செ.மீ. |
| முருகன் | : உயரம் 29 செ.மீ. அகலம் 8 செ.மீ. |
| அம்மை | : உயரம் 53 செ.மீ. அகலம் 17 செ.மீ. |

**கோமளவல்லியம்மை**

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை. தலையில் கரண்ட மகுடம், காதுகளில் மகர குண்டலங்களும், தோள்களில் வாகுவளையங்களும், கேயூரங்கள், இரண்டு கரங்களில் வலக்கரம் மலர் தாங்கியும், இடக்கரம் லோல முத்திரையிலும் உள்ளது. கழுத்தில் அணிகள் அலங்கரிக்கின்றன. இடையில் ஆடை பாதம் வரை நீண்டு தொங்குகின்றது. உயரம் 56 செ.மீ. அகலம் 17 செ.மீ. காலம் 19 — ஆம் நூற்றாண்டு.

**பூதேவி**

திரிபங்க நிலையில் பத்ம பீடத்தில் நின்றுள்ள அம்மனின் வலக்கை நீலோற்பவ மலர் தாங்கிய நிலையிலும், இடக்கை தொங்கவிட்ட நிலையிலும் உள்ளன.

கரண்ட மகுடம் தரித்து, காதுகளில் மகர குண்டலம் காணப்படுகிறது. தோள்களில் வாகுமாலைகளும், கேயூரங்களும் கைகளில் வளையல்களும் அழகு செய்கின்றன. இடையில் கட்டியுள்ள ஆடை பாதம் வரை நீண்டு காணப்படுகிறது.



**தனியம்மை**

பத்ம பீடத்தின்மேல் நின்ற நிலையில் உள்ள அம்மன். வலக்கையில் நீலோற்பல மலர், இடக்கரம் லோல ஹஸ்தத்தில் உள்ளது. தலையில் ஜடாமகுடம் அணிந்து காதுகளில் குண்டலங்கள் அணிந்து காணப்படுகின்றாள். வாகுமாலைகளும், கேயூரங்களும் உள்ளன. ஸ்தான சூத்திரம் காணப்படுகிறது. அழகிய நீண்ட ஆடையுடன் திரிபங்க நிலையில் நின்றிருக்கிறார்.

**விநாயகர்**

பத்ம பீடத்தில் அமர்ந்த நிலை, தலையில் கிரீட மகுடம் தரித்தவாறு, நான்கு கைகளில் சூலம், பாசம், தந்தம், மோதகம் கொண்டு காணப்படுகிறது. இரண்டு கால்களையும் மடக்கிய நிலையில், இடையில் உதரபந்தத்துடன் அமைந்துள்ளது. உயரம் 16 செ.மீ. அகலம் 28 செ.மீ.

**அஸ்திர தேவர்**

சூலத்தின் நடுவே பூவேலைப்பாடுகள் காணப்படுகின்றன. பத்ர பீடத்தின் மேல் இச்சிற்பம் அமைந்துள்ளது. உயரம் 55 செ.மீ. அகலம் 22 செ.மீ.

**சிவகாமி அம்மை**

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலை, இரு கைகள் முறையே வலக்கையில் மலரேந்திய பாவனையும், இடக்கை லோல முத்திரையிலும் உள்ளன. தலையில் கரண்ட மகுடம், கழுத்தணிகள் காணப்படுகின்றன. இடையில் பாதம் வரை நீண்டு தொங்கும் ஆடை. உயரம் 77 செ.மீ. அகலம் 21 செ.மீ.

**தனியம்மை**

பத்ம பீடத்தின் மேல் அமர்ந்த நிலை, தலையில் ஜடாமகுடம், வலக்கை நீலோற்பவ மலர் தாங்கிய நிலையிலும், இடக்கை நித்ரா முத்திரையிலும் இருக்கின்றன. வலக்காலை மடித்தும், இடக்காலைத் தொங்கவிட்ட நிலையிலும் உள்ளன.

### குழல்வாய்மொழியம்மன்

பத்ம பீடத்தின் மேல் நின்ற நிலையில் இருக்கும் அம்மன் சிற்பம் ஜடாமகுடத்துடன் காணப்படுகின்றது. காதுகளில் மகரகுண்டலங்கள் அணிந்து, வலக்கையில் நீலோற்பவ மலரேந்தி இடக்கையை எழிலாகத் தொங்கவிட்டிருக்கிறார். ஸ்தான சூத்திரமும், புரிநூலும் மார்பில் காணப்படுகிறது. இடுப்பில் நீண்ட ஆடை அணிந்திருக்கிறார். பாதங்களில் சிலம்பு அணியைக் காணமுடிகிறது.

### தெய்வானை

பத்ம பீடத்தின் மேல் திரிபங்க நிலையில் நின்ற கோலம். தலையில் கரண்ட மகுடம், காதுகளில் பத்ர குண்டலங்கள், கழுத்தில் அணிகளும், தோள்களில் வாகுவளையங்களும், கேயூரமும் உள்ளன. இடையில் கடி சூத்திரத்தோடு, நீண்ட ஆடை அணிந்து பாதச் சிலம்புகளுடன் காட்சியளிக்கிறார். இடக்கையில் மலரேந்தி வலக்கையைத் தொங்கவிட்டிருக்கிறார். உயரம் 48 செ.மீ. அகலம் 11 செ.மீ.

### சந்திரசேகரர்

பத்ம பீடத்தின் மேல் நின்றுள்ள இறைவனின் தலையில் ஜடாமகுடம் உள்ளது. காதுகளில் மகர பத்ர குண்டலங்கள் அணியப்பட்டுள்ளன. நான்கு கரங்களுடன் காணப்படும் அவருடைய மேல் வல, இடக்கரங்களில் மழு, மான் காணப்படுகிறது. கீழ் வல இடக்கரங்களில் அபய, வரத முத்திரையுடன் உள்ளது.

தோள்களில் வாகுமாலைகள் காணப்படுகின்றது. கழுத்தில் அணிகளும், மார்பில் புரிநூலும், உதரபந்தமும் உள்ளன. இடை முதல் பாதம் வரை நீண்ட ஆடை கடி சூத்திரங்களுடன் காணப்படுகின்றது. உயரம் 84 செ.மீ. அகலம் 32 செ.மீ.



# ஓவியக்கலை

ஓவியக்கலையிலும் தமிழ்க்கலைஞர்கள் மிகச்சிறந்த நுட்பங்களையும், வண்ணக் குழம்புகளைத் தயாரிப்பதில் மிகச்சிறந்த பயிற்சியும் பெற்றிருந்தனர் என்பதற்கு பனைமலை, காஞ்சி, தில்லை, சித்தன்னவாசல் முதலிய இடங்களிலுள்ள ஓவியங்கள் காட்சியளிக்கின்றன.

குற்றாலத்தில் 'சித்திரசபை' என்றே சிறப்புமிகு பெயர் கொண்ட கோயில் அமைந்துள்ளது. ஐந்து சபைகளில் ஒன்றாகிய இச்சித்திரசபையில் நடராசப் பெருமான் ஓவிய வடிவில் கருவறையில் உள்ளார்.

விசயநகர மன்னர்களைப் பின்பற்றி அவர்கள் பிரதிநிதிகளாக வந்த நாயக்கர் பல இடங்களில் ஓவியங்களைத் தீட்டி வைத்துள்ளனர். மதுரை, தில்லை, திருவெள்ளறை, திருக்குற்றாலம், திருவலம்புரி, குடந்தை, திருவரங்கம், செங்கம், பட்டீஸ்வரம் முதலிய இடங்களில் நாயக்கர்கால ஓவியங்கள் உள்ளன.

சித்திர சபையில் நாயக்கர்கால ஓவியங்களில் சிறு பகுதியே எஞ்சியுள்ளது. ஏனைய இடங்களில் புதிய ஓவியங்களை வரைந்து விட்டனர். 1961 — இல் நடந்த கும்பாபிசேகத்தின்பொழுது இவை மறைக்கப்பட்டுவிட்டன.

இங்குள்ள மீனாட்சியம்மை புராணங்களைச் சித்தரிக்கும் நிகழ்ச்சிகள் நாயக்கர் காலத்தவை.

மகாகணபதியின் ஓவியம் அழகாக உள்ளது. இவர் தலை ஆபரணங்கள் முதலியவற்றிற்கு பொன் வண்ணம் தரப்பட்டுள்ளது.

அரவணையில் திருமால் பள்ளிகொண்ட கோலம் ஒரு மனித உருவத்தின் சராசரி வடிவிலேயே சித்தரிக்கப்பட்டுள்ளது. கொப்பூழிலிருந்து தோன்றும் தாமரை மலரில் பிரம்மா தோன்றுதல் காட்சியும் உள்ளது. இப்பகுதியில் உள்ள அனைத்து ஓவியங்களிலும் திருநாமம் இடப்பட்டுள்ளது.

இராமர் இராவணன் போர் செய்யுங் காட்சி, பராசக்திக்குப் பூசை செய்தல், தாராசூரன், சிங்கமுகசூரன், சூரபத்மன், முருகன் முதலிய ஓவியங்களும் அழகாக உள்ளன. பழைய ஓவியத்தை அழித்துப் புதிய ஓவியம் வரைந்துள்ளமையின் சுவடுகள் சூரபத்மனின் ஓவியத்தில் தெரிகிறது.

தெற்குப் பகுதியில் பத்திரகாளி பசுமை வண்ணத்தில் 8 கரங்களோடு சித்தரிக்கப்பட்டுள்ளாள். வீரப்பல் இருந்த போதிலும் சிரிக்கும் பாவனையும், நெற்றியில் திருநீறும், பொட்டும் வைக்கப்பட்டுள்ளது. தலையில் அழல் அலங்காரமும், கழுத்தில் மாலையுடன் இவ்வோவியம் அமைந்துள்ளது.

***கரங்களில்***

| | |
|---|---|
| சூலம் | சாட்டை |
| அம்பு | வில் |
| உடுக்கை பாம்பு | மணி |
| மனிதன் | கிண்ணத்தில் குருதி |

என்ற முறையில் கை அமைதிகள் உள்ளது.

ஊர்த்துவ தாண்டவம் மிக அழகாக வரையப்பட்டுள்ளது. இடுப்பிலிருந்து மேலாடை பசிய வண்ணத்தில் வரையப்பட்டுள்ளது. மூக்கு, உதடுகள் அழகுற அமையவில்லை. தலையலங்காரத்தில் மனித உருவம், பிறை நிலா ஆகியவை காணப்படுகின்றன.



*1961* — இல் தருமபுர ஆதீனத்தாரால் அனுப்பிவைக்கப்பட்ட ஓவியர்கள் இங்கு சுமார் ஆறுமாத காலம் தங்கி இவ்வோவியங்களைப் புதுப்பித்ததாக நேரில் கண்டவர்கள் கூறுகிறார்கள்.

சித்திரசபை பற்றி திரு. சி. சிவராமமூர்த்தி அவர்கள் கூறுவதும் அறியத்தக்கது.

"another Sabhā famous for Nataraja is the Chitra Sabhā at Kuttalam. The tradition of associating Vishṇu and Sivā together in dance is also here. The temple, which was originally for Vishṇu, is reputed to have been turned essentially into a Saivā one by Agastyā, with Natarājā as the Principal deity, not shown in sculpture form, butas a painted picture. that is why this sabhā is a Chitrasabhā, a sabhā where Śivā dances in a painted picture rather than as a metallic or lithic representation. This is a large and picturesque hall, not for from the famous waterfalls, and is one of the reputed sacred spots associated with Natarājā."



# சுற்றுக்கோயில்கள்

குற்றாலநாதர் கோயிலுக்கு எதிராகவுள்ள ஆற்றங்கரையில் சிறு கோபுரங்கள் கொண்ட இரண்டு குறிஞ்சி மண்டபங்களும், மத்தியில் ஒரு படித்துறையும் உண்டு.

தெற்கு வீதியில் அரச மரத்தடியில் செண்பக விநாயகர் கோயில் உள்ளது. மரத்தைச் சுற்றிலும் ஏராளமான நாகலிங்கங்கள் மேடையில் வைக்கப்பட்டுள்ளன. அருவியில் நீராடி வரும் பக்தர்கள் அரசமரத்தைச் சுற்றி வந்து வழிபடுகின்றனர். அடுத்து வைத்தியப்ப விலாச மண்டபமும், படித்துறையும் வருகின்றன.

கோயில் தெற்கு வாயில் முன் ஒரு பலா மரத்தடியில் ஓர் ஐயனாரும். சற்று மேற்கே ஓர் கணபதி சக்தியுடனும் தோன்றுவார்கள். இங்கே அருவிப்பாதை பிரிகிறது.

மேற்கு வீதி மலையின் அடியில் உள்ளது. கன்னியில் பிள்ளையன் கட்டளை மண்டபமும், ஒரு சிறு விநாயகர் கோயிலும் உண்டு. இவ்வீதியில் நின்று மலையை நோக்க கண்களுக்கு நல்ல விருந்தாகும். இவ்வீதியில் நன்கு செதுக்கப்பட்ட நகரத்தார் கால கற்றூண்கள் மண்ணில் புதைந்து கிடக்கின்றன.

வடக்கு வீதியில் வடக்கு வாயிலுக்கு முன் பதினெண் ஸ்மிருதிகளும் பதினெட்டுப்படிகளாக அமைந்து கிடக்கின்றன. இதற்குமேல் குற்றாலக் கருப்பன் தெற்கு நோக்கி கனதுடியாய் நின்று காவல் புரிகிறான். இவனைப் பதினெட்டாம்படிக் கருப்பன் என்றுஞ் சொல்வதுண்டு. வடக்கு வாயில் மண்டபத்துள் காவல் புரியுஞ் சிறு தேவதைகளைக் காணலாம்.



## சார்புக் கோயில்கள்

### செண்பகாதேவி

இக்கோயில் குற்றாலநாதர் கோயிலில் இருந்து மலையின் மேல் இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. இக்கோயிலுக்குச் செல்ல மலைச்சாலையை விட மலைப்பாதையே பெரும்பகுதி பயன்படுகிறது.

செண்பக அருவிக்குப் பக்கத்தில் கோயில் கொண்ட இத்தேவி செண்பகவனத்தைக் காவல் புரிபவள். கருவறையுள் வாலேஸ்வரி, புவனேஸ்வரி, திரிபுரசுந்தரி என மூன்று தேவியர் உருவங்கள் உள்ளன. கருவறை வாயிலின் வடபுறம் ஆஞ்சநேயர் கையில் கதையுடன் நின்ற கோலத்தில் இருக்கிறார்.

அகத்தியர் அமர்ந்த நிலையில் வலது கை அபய முத்திரையோடும், இடது கை இடது கால் முட்டியில் படிந்தவாறும், சடை, மீசை தாடியோடு அமர்ந்துள்ளார்.

தெற்குப் பக்கம் வடக்குப் பார்த்த நிலையில் பேச்சியம்மை சிற்பம் உள்ளது. நான்கு கரங்களிலும் உடுக்கை, சூலம், கிளி, தீ முத்திரைகள் காணப்படுகின்றன. இக்கோயிலுக்குப் பக்கத்தில் ஒரு மண்டபமும் அருவிக்கு மேல் ஒரு குகையும் உள்ளது.

### சித்திர சபை

ஐந்தருவிக்குப் போகும் சாலையில் வடக்குப் பக்கமாக இது அமைந்துள்ளது. இஃது இறைவன் திருநடனமிடும் ஐந்து சபைகளில் ஒன்று. மற்ற சபைகளில் விக்கிரமாகக் காட்சியளிக்கும் நடராசப் பெருமான், இங்கு ஓவிய உருவமாய் காட்சியளிக்கிறார். பலவகைத் தாண்டவங்களில் ஒன்றாகிய திரிபுர தாண்டவம் இங்கே நடைபெறுகிறதென்று திருப்புத்தூர் புராணம் "திருக்குற்றாலத்தில் சித்திரசபையிற் செய்வோம் திரிபுர தாண்டவம்" எனக் கூறுகிறது.

சபைக்கு முன்னர் தெப்பக்குளமும் மத்தியில் உயர்ந்த கோபுரமும் உள்ள நீராழி மண்டபமும் அமைந்துள்ளது. 20 அடி ஆழமுள்ள இக்குளத்தில் உள்ள நீராழி மண்டபத்தை மணிமண்டப விமானம் என்றழைக்கின்றனர். இம்மண்டபத்தில் 24 தூண்கள் உள்ளன. மண்டப விமானத்தில் சுதையுருவங்கள் பல அணிசெய்கின்றன. மேடை நடுவில் நந்தியின் சிறு சிற்பம் உள்ளது.

தை மகத்திற்குத் தெப்பக்குளத்தில் உற்சவம் நடைபெறும். திருக்குற்றாலநாத சுவாமி, அம்பாள், உற்சவமூர்த்திகள் குற்றாலநாதர் கோயிலில் இருந்து தை மகத்தன்று சித்திரசபையின் முன்மண்டபத்திற்கு கொண்டுவரப்படுவர். திருவிலஞ்சிக்குமரன் கோயிலில் இருந்து குமரன் வள்ளி தெய்வானை சமேதராக சித்திரசபை முன்மண்டபத்திற்கு அழைத்து வரப்படுவார்.

இரண்டு ரிஷப வாகனத்தில் அமைந்த அலங்கரிக்கப்பட்ட சப்பரத்தில் அம்மையையும் அப்பனையும், மயில் வாகனத்தில் அமைந்த அலங்கரிக்கப்பட்ட சப்பரத்தில் முருகன் வள்ளி தெய்வானையையும் வைத்து திருவுலா நடைபெறும். பின்பு வாண வேடிக்கைகள் நடைபெறும். அதுமுடிந்த பின்பு திருக்குற்றாலநாத சுவாமி கோயிலுக்கு அழைத்துச் செல்லப்படுவார்கள். அன்று இரவு இலஞ்சிக்குமரன் தமது கோயிலுக்கு பெற்றோரிடமிருந்து விடைபெற்று செல்வார். இத்திருநாளில் மக்கள் கூட்டம் நிரம்பி வழியும்.

## கருவறை மண்டபம்

கல் பீடத்தில் அமைந்து, கற்சுவரால் கட்டப்பட்டு அதன்மேல் அலங்கரிக்கப்பட்ட மரத்தினாலான மேற்கூரை வேயப்பட்டு அதற்குமேல் செப்பு ஓடுகளால் வேயப்பட்டுள்ளது. கற்சுவரில்



சுண்ணாம்பாலான சாந்து பூசப்பட்டு, அதற்குமேல் புராண தெய்வ ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன. சித்திர சபையைச் சுற்றி சுமார் 15 அடி உயரமுள்ள மதிற்சுவர் அமைந்துள்ளது.

சித்திர சபையில் நுழைந்தவுடன் கல்மண்டபத் திண்ணையில் குழல்வாய்மொழியம்மை கோயிலிலிருந்து திருப்பணி செய்யப்பட்ட நாட்களில் கொண்டுவரப்பட்ட நான்கு நாயக்கர்கால அழகிய சிற்பங்கள் நம்மை மகிழ்வோடு வரவேற்கும்.

சபையில் நடராசப் பெருமான் தேவியாருடன் எழுந்தருளியிருக்கின்றார். மார்கழி மாதத்தில் திருவாதிரை விழா விமரிசையாக நடைபெறும். அன்று இங்கு ஆராதனை நடந்த பிறகே திரிகூட மண்டபத்தில் எழுந்தருளியிருக்கும் நடராச மூர்த்திக்கு ஆராதனை நடைபெறும். சபையில் இறைவன் திருநடனம் புரியும் காட்சியைக் கண்டு பிரமதேவன் ஆதிசக்தி சிவபிரானுடைய சொரூபங்களைச் சுவரில் எழுதி வைத்தான். வியாசர் முதலியோர் இதனால் இதைச் சித்திர சபை என்றழைத்தனர்.

காசி கண்ட பராக்கிரம பாண்டியன் ஆதியில் இச்சபையைக் கட்ட ஆரம்பித்தான். சபையின் கீழ் மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் இக்கோயிலில் பயன்படுத்திய ஓர் அளவுகோல் எடுக்கமுடியாதபடி போடப்பட்டிருக்கிறது.

1957 — ஆம் வருடத்தில் பிரகாரத்தில் கல்தளவரிசை செப்பனிடப்பட்டுச் செப்பேடும் பழுது பார்க்கப்பட்டது. சபைக்குரிய புராண பாக்கள் சலவைக் கற்களில் எழுதிச் சுவரில் பதிக்கப்பட்டிருக்கின்றன.

நடராசப் பெருமான் வடக்கேயுள்ள திருவாலங்காட்டை விட்டுத் தெற்கே குற்றாலத்தை நோக்கி வந்தது இங்கு வீசும் தென்றல் காற்றில் இளைப்பாறவும், தீந்தமிழை அனுபவிக்கவுமென்று பரஞ்சோதி முனிவர் கூறுகின்றார்.

### குற்றால நங்கை

திருவாங்கூர் திவான் தங்கும் வீடாயிருந்து தற்காலப் பயணிகள் விடுதியாக விளங்கும் இடத்தின் நான்கு எல்லைக்குள் இக்கோயில் இருக்கின்றது. கோயில் வடக்கு எல்லையைக் காக்கும் தேவதை உள்ளது.

### கூத்தர் கோயில்

ஐந்தருவிப் பாதையும், இலஞ்சிப் பாதையும் சந்திக்கின்ற இடத்தில் உள்ளது. திருக்கூத்தர் கிழக்கு நோக்கியும், குழல்வாய்மொழியம்மை தெற்கு நோக்கியும் உருவச் செறிவுடன் சிறிய கோயில்களில் எழுந்தருளியுள்ளனர். முகப்பில் சந்திரசேகரரும், தேவியும், விநாயகரும், சுப்பிரமணியரும் அமைத்து சீர்திருத்தம் செய்யப்பட்டிருக்கின்றது. இக்கோயில் குற்றாலநாதர் கோயிலுக்கு முன் தோன்றியதாகக் கருதப்படுகிறது என்று தல வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### அடியொட்டும்பாறை பன்றி மாடசாமி

சித்ரா நதியின் கீழ் கரையில் திருவாவடுதுறை மடத்துக்கு முன்னர், பேருந்து நிலையத்திற்கும் சற்று மேற்கே உள்ளது. நவாபுகள் ஆட்சிக்காலத்தில் ஒரு பட்டாணி குதிரையேறிக் கொண்டு குற்றாலநாதரை மதியாமல் ஆலயத்துக்குச் சிறிது தூரத்தில் இங்குவர, அங்குள்ளார் தடை செய்தும் கேளாமல் மீண்டும் குதிரையைச் செலுத்த, அக்குதிரை அடியெடுத்து வைக்க மாட்டாமல் ஒட்டிக்கொண்டு நின்றதால் அடியொட்டும் பாறையெனப் பெயர் பெற்றது என்பர்.

### ஆவரண பிள்ளையார்

மேற்குறித்த கோயிலுக்குங் கீழ்புறம் உள்ளது. ஆன்மாக்கள் சுத்தமடையும்போது இன்பந்தரும் புண்ணியத்திலாவது துன்பந்தரும் பாவத்திலாவது மனதைச் செல்லவிடாது



சிவஞானத்தில் செலுத்தும்படி உலகப்பற்றையும், நன்மை தீமை என்ற கர்ம பேதத்தையும் மறைப்பது ஆவரண சக்தி. இப்பிள்ளையார் கோயில் முற்றிலுங் கல்லாற் புதுப்பிக்கப் பட்டிருக்கிறது.

### திருஞானசம்பந்த விநாயகர்

இக்கோயில் பராசக்தி மகளிர் கல்லூரி அருகில் அமைந்துள்ளது. சிறிய மதிற்சுவரின் அரணுள் அமைந்திருக்கும் கிழக்கு நோக்கிய கருவறையில் விநாயகர் அமர்ந்துள்ளார். வலப்புறம் திருஞானசம்பந்தர் இடது கையைத் தூக்கிய நிலையிலும், வலது கையில் கனி தாங்கிய நிலையிலும் நிற்கிறார்.

திருஞானசம்பந்தர் இத்தலத்திற்கு வந்த ஞான்று எங்குஞ் சிவலிங்கங்கள் இருப்பதைக் கண்டு சிவிகையிற் செல்ல அஞ்சி இந்த இடத்தில் இறங்கி நடந்து சென்று திருக்குற்றாலத் திறைவனை வழிபட்டுப் பதிகம் பாடியருளியதாகவும், இதனால் இவ்விநாயகர் சம்பந்த விநாயகர் என்று பெயர் பெற்றதாகவும் ஓர் பரம்பரைச் செய்தி உலவுகிறது. கி.பி. 1957 — இல் இக்கோயில் மதிற்சுவர்களும் கோபுரமும் செப்பனிடப்பட்டது.

### நன்னகரப் பிள்ளையாரும் பன்றி மாடசாமியும்

தென்காசியிலிருந்து குற்றாலத்துக்கு வருகிற வழியில் உள்ள நன்னகரம் என்ற ஊரில் கற்பாதையின் பக்கத்தில் கோயில் அமைந்துள்ளது.

### திட்டைப் பிள்ளையார்

தென்காசி — குற்றாலம் பாதையில் வாழவல்லான் குடிக்காலின் தென்கரையில் ஒரு மேட்டில் உள்ளார். (திட்டை — மேடு).

### வரசித்தி விநாயகர்

குற்றாலநாதர் கோயில் எல்லைக்குள் கோயிலுக்குச் சற்று கிழக்கே கோயிலுக்கும் தென்காசிக்கும் பிரிகிற சாலையின்

இடைப்பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது. கருவறையில் விநாயகரின் சிற்பம் உள்ளது. கோயிலின் மேலே அமைந்துள்ள சிறிய விமானத்தில் சுதை வேலைப்பாடுகளால் அமைந்த தெய்வ உருவங்களும் அமைந்துள்ளன.

### சுந்தரமூர்த்தி திருக்கோயில்

இக்கோயில் வரசித்தி விநாயகர் கோயிலுக்கு சற்று கிழக்கே அமைந்துள்ளது. சங்கரலிங்கம், கோமதியம்மாள் சிற்பங்கள் கருவறையுள் உள்ளன. கருவறை தெற்கில் அணுக்க விநாயகர் சிற்பம் காணப்படுகிறது. விமானம் சுதை வேலைப்பாடுகளால் அழகுற அமைந்துள்ளது.



# கல்வெட்டுகள் தரும் வரலாற்றுச் செய்திகள்

கி.பி. 8 — ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 13 — ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி புரிந்த மன்னர்களைப் பற்றி குறிப்பிடும் கல்வெட்டுகள் பின்வருமாறு:

1. மாறஞ்சடையன் பரகேசரிவர்மன் — (6 கல்வெட்டுகள்)
2. மதிரை கொண்ட பரகேசரிவர்மன் — (10 கல்வெட்டுகள்)
3. முதலாம் இராஜராஜன் — (3 கல்வெட்டுகள்)
4. திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவல்லபதேவன் — (2 கல்வெட்டுகள்)
5. பரகேசரிவர்மன் முதலாம் இராஜேந்திரன் — (7 கல்வெட்டுகள்)
6. மாறவர்மன் என்கிற திரிபுவனச் சக்கரவர்த்திகள் சுந்தரபாண்டிய தேவன் — (3 கல்வெட்டுகள்)

### மாறஞ்சடையன் (கி.பி. 765-815)

பராங்குச மாறவர்மனுக்கும் காடக அரசன் மகளான பூசுந்தரிக்கும் பிறந்த மூத்த மகனிவன். இவனது மூன்றாவது ஆட்சியாண்டில் வேள்விக்குடிச் செப்பேடு வெளியிடப்பட்டது. வேலங்குடி என்ற ஊரைச் சீவரமங்கலம் என்று பெயரிட்டு பிரமதேயமாக வழங்கினான்.

ஆனால் 17 — ஆவது ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட சீவரமங்கலச் செப்பேடு இவனை பரம வைஷ்ணவனாகக் காட்டுகிறது.

இவன் ஆட்சியின் தொடக்கத்தில் நந்திவர்ம பல்லவ மன்னனைக் காவிரியின் தென்கரையில் உள்ள பெண்ணாகடத்தில் புறங்காட்டி ஓடச் செய்தான். ஆய்வேள் குறும்பர் ஆகியோரை வென்றான் என்று வேள்விக்குடிச் செப்பேடும், வெள்ளூர் விண்ணம், செழியக்குடி என்ற ஊர்களில் பகைவர்களை வென்றான் என்று சீவரமங்கலச் செப்பேடும் குறிக்கின்றன. எனவே ஆய்வேளை அடக்கினான் என்று தெரிகிறது.

இவனது ஆறாவது ஆட்சியாண்டில் விடேல் விடுகு முத்தரையர் மகளார் சாத்தன் காளியார் ஆயிரத்தளி மகாதேவருக்கு திருநந்தா விளக்கு வைத்த செய்தி காணப்படுகிறது. இந்த முத்தரையன் இம்மன்னன் காலத்தில் தஞ்சைக்கு மன்னவனாகத் திகழ்ந்தான் [சதாசிவ பண்டாரத்தார்].

மேலும் திருச்சியில் இவனது 11 — ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு வேம்பையழித்து நியமத்தில் தங்கியிருந்தபோது திருச்சி மகாதேவருக்கு 125 கழஞ்சு பொன் அளித்தான் எனக் கூறுவதால் முத்தரையர்களும் இவனுக்கு அடங்கி வாழ்ந்தனர். சோழமண்டலம் முழுவதும் இவன் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. இவன் பல்லவனை கருவூரில் வென்ற செய்தி பராந்தக பாண்டியனின் 7 — ஆம் ஆட்சியாண்டின் செப்பேடு கூறும். மேலும் கி.பி. 795 — 846 வரை அரசாண்ட தந்திவர்மன் கல்வெட்டு சோழ நாட்டில் காணப்படவில்லை. எனவே வரகுணன் சோழநாட்டின்மேல் படையெடுத்து அதனைத் தனக்கு அடிமையாக்கியிருக்க வேண்டும்.

'கொற்றவர்கள் தொழ கழற்காற் கோ வரகுண மகாராசன்' எனச் சின்னமனூர் செப்பேடு கூறுகிறது.

16 — ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு நந்திவர்மனை வென்று பெண்ணைக் கரையிலுள்ள அரசூரில் வீற்றிருந்தபோது அம்பை கோயிலுக்கு 290 காசு வழங்கிய செய்தி காணப்படுகிறது. எனவே தொண்டை நாட்டின் தென்பகுதி இவனுக்குக் கீழிருந்தது.



இவனது புகழ்பெற்ற கழுகுமலைக் கல்வெட்டு ஆயை வென்று அரிவி ஊர்க்கோட்டையை அழித்த செய்தியைக் கூறுகிறது. (A.R.E. No: 43 of 1908).

மாணிக்கவாசகர் இவன் காலத்தவரே. திருச்சிற்றம்பலக் கோவையாரில் இவ்வேந்தன் பற்றி இரண்டு பாடல்களில் பாடியுள்ளார்.

*மன்னவன் தென்முனை மேற்செல்லுமாயின் மாலரியே*
*றன்னவன் தேர்புறத்தல் கல்செல்லாது வரகுணனாந்*
*தென்னவ னேத்து சிற்றம்பலத்தான் மற்றவைத் தேவர்க்கெல்லா*
*முன்னவன் மூவலன் னாளு மற்றோர் தெய்வம் முன்னலளே*
(306)

*புயலோங்கலர் சடையேற்றவன் சிற்றம்பலம் புகழும்*
*மயலோங் கீருங் களியானை வரகுணன் வெற்பின் வைத்த*
*கயலோங் கிருஞ்சிக் கொண்டு மன் கோபமுங் காட்டிவருஞ்*
*செயலோங் கெயிலெரி செய்தபின் இன்றோர் திருமுகமே*
(327)

பட்டினத்தார் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில் இவன் சிவபக்தி மேலீட்டால் ஆற்றிய அரும்பெருந் தொண்டுகள் எல்லாவற்றையும் கூறியுள்ளார்.

### மதிரை கொண்ட பரகேசரிவர்மன்

கடுங்கோன் முதல் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் வரை பாண்டியநாடு மாற்றுநில மன்னர்கள் வசப்படவில்லை. ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் மகன் இரண்டாம் வரகுணன் காலத்தில் சோழ சாம்ராச்சியத்தின் முதல் மன்னவன் விஜயாலயன் பாண்டியர்களுக்கு அடங்கி நடந்த முத்தரையர்களை வென்று தஞ்சை, செந்தலை ஆகிய ஊர்களைக் கைப்பற்றிக் கொண்டான். இவன் மகன் முதல் ஆதித்தனும் இரண்டாம் வரகுணனோடு திருப்புறம்பியத்தில் போரிட்டு வென்றான்.

வரகுணன் தம்பி பராந்தக பாண்டியனின் மகன் மூன்றாம் ராஜசிம்மன் காலத்தில் சோழ மன்னனாகத் திகழ்ந்தவன் முதலாம் ஆதித்த சோழனின் மகன் முதலாம் பராந்தக பாண்டியன். இவனே மூன்றாம் ராஜசிம்ம பாண்டியனை வென்று கி.பி. 910 — இல் மதுரையைக் கைப்பற்றியதால் 'மதிரை கொண்ட பரகேசரி' என்று பட்டம் பூண்டவன். இவன் காலத்தில்தான் பாண்டியனின் இந்திர ஆரமும் சுந்தர முடியும் இலங்கைக்குச் சென்றது. அதனால் இலங்கை மன்னர்களை வென்று,

'மதிரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரிவர்மன்' என்று சிறப்புப் பெயர் பெற்றான்.

வாகைப்பாடி நாட்டையும், வைதும்பர்களை வென்று அவர்கள் நாட்டையும், சீட்புலநாடு, நெல்லூர் மாவட்டத்தின் வடபகுதியையும், மூன்றாம் கிருஷ்ணன், அமோகவர்சன், கங்கபுதூரகன் ஆகிய மன்னர்களையும் வென்றான். இவன்தான் தில்லைச்சிற்றம்பலத்திற்குப் பொன் வேய்ந்தான். புகழ்பெற்ற உத்திரமேரூர் கிராமசபை தேர்தல்முறைக் கல்வெட்டு இம்மன்னனதே.

*'வெங்கோல் வேந்தன் தென்னாடும் ஈழமும் கொண்டதிறற்*
*செங்கோற் சோழன் கோழீவேந்தன் செம்பியன் பொன்னணிந்த*
*அங்கோல் வளையார் பாடியாடும் அணிதில்லை யம்பலம்'*
— 9 — ஆம் திருமுறை

*'கோதிலாத் தேறல் குனிக்குந் திருமன்றம்*
*காதலாற் பொன் வேய்ந்த காவலனும்'* — விக்கிரம சோழனுலா

*ஈழமுத்தமிழ்க் கூடலுஞ்சிதைத்*
*திகல் கடந்ததோர் இசை பரந்ததும்* — கலிங்கத்துப்பரணி 2,3.

*. . . நரபதியர் தாழமுன் சென்று மதுரைத் தமிழ்ப்பதியும்*
*ஈழமுங் கொண்ட இகலாளி* — குலோத்துங்க சோழனுலா



## முதலாம் ராஜராஜன்

முதலாம் பராந்தகச் சோழனுக்குப் பிறகு பாண்டிய நாட்டின் மேல் படையெடுத்தவன் முதலாம் ராஜராஜன். ஆனால் ராஜராஜன்தான் முதன்முதலில் பாண்டிய நாட்டில் நேரடி ஆட்சியைக் கொண்டு வந்தவன். பாண்டிய நாட்டை 'ராஜராஜ பாண்டி மண்டலம்' என்று பெயர் மாற்றி அமைத்தான். பாண்டிய நாடெங்கும் பரவலாக இவனது கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கொல்லம், குடமலை நாடு, கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி, ஈழ மண்டலம், மேலை, கீழ சாளுக்கிய நாடு, கலிங்கம், முந்நீர் பழந்தீவு பன்னீராயிரம் ஆகிய நாடுகளை வென்றான். இவன் காலம் முதல் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சிக்கு வரும் வரை பாண்டிய நாடு சோழர் வசமிருந்தது. ஆனாலும் வீரம் செறிந்த பாண்டியர்கள் சோழர்களின் தலைமையை ஏற்றுக்கொள்ளவில்லை. அவ்வப்போது உரிமைக்குரல் எழுப்பிய வண்ணமிருந்தனர். ராஜராஜன் காலத்தில் ஸ்ரீவல்லபன் என்ற மன்னன் பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை சோழனுக்கடங்கி ஆட்சிபுரிந்தான்.

முதலாம் ராஜேந்திர சோழன் காலத்தில் பாண்டிய நாட்டில் உரிமையிழந்த அரசவம்சத்தினரில் கலகம் இடைவிடாது காணப்பட்டது. எனவே முதலாம் ராஜேந்திரன் தன்மகன் ஒருவனுக்கு 'ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன்' எனப் பட்டம் சூட்டி, மதுரையில் அரண்மனை ஒன்று எழுப்பி, அவனைப் பிரதிநிதியாக்கி, பாண்டிய நாட்டை ஆளச்செய்துவிட்டுதான் வடநாட்டுப் படையெடுப்பினைத் தொடர்ந்தான்.

ஸ்ரீவிஜயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், மாபப்பாளம், இலிம்பங்கம், வளைப்பந்தூர், தக்கோலம், மாதமாலிங்கம், இலாமுரிதேசம், நக்கவாரம், கடாரம், கங்கை

*[கங்காநதியும் கடாரமுங் கைக்கொண்டு*
*சிங்காதனத்திருந்த செம்பியர்கோன்]*

— உலா

ஆகிய இத்தனை நாடுகளையும் வென்ற மாபெரும் மன்னவன் முதலாம் ராஜேந்திரன் ஆட்சியில் பாண்டிய நாடு அவன் வசமிருந்தது.

**மாறவர்மன் சுந்தர பாண்டியன்**

மாபெரும் சோழ சாம்ராச்சியத்தின் ஒப்பற்ற மன்னவர்களின் வம்சத்தில் வந்த மூன்றாம் ராஜராஜன் காலத்தில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழர்களுக்கடங்கிய பாண்டிய மன்னனாக அரசேற்றான். திறமைமிக்க இவன் சுமார் 300 ஆண்டுகளாக சோழர்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்த பாண்டிய நாட்டை மூன்றாம் ராஜராஜனை வென்று மீட்டான். பாண்டிய நாட்டை மீட்டு சோழ நாட்டையும் கைப்பற்றினான்.

இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகள் தமிழ் மொழியில் காணப்படுகிறது. இக்கோயிலில் கிடைத்துள்ள கல்வெட்டுகளுள் மாறஞ்சடையனின் 8 — ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுகளே காலத்தால் முற்பட்டவை. இம்மன்னனின் காலத்தைய கல்வெட்டுகள் கோயிலுக்கு நுந்தா விளக்கெரிக்க தானம் கொடுக்கப்பட்ட செய்திகளைக் கூறுகிறது.

தானமாகக் கொடுக்கப்பட்ட விளக்குகள் 3½. ஒவ்வொரு விளக்கிற்கும் ஆறு எருமைகள் அல்லது இருபத்தாறு பசுக்கள் என்ற கணக்கில் கொடுத்திருக்கின்றனர். ½ விளக்கிற்கு 3 எருமைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தானம் கொடுத்தோர் பொலியூரைச் சேர்ந்த அதிகாரி மாறனாச்சன், தர்மசேந்தி என்ற சடையன் காவையன், புயலன் காட்டன் (வணிகன்), நல்லூர் பாண்டிக்குடியான் ஆகியோர். புயலன் காட்டன் என்பவன் வியாபாரி என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. கி.பி. 8 — ஆம் நூற்றாண்டு வணிகர்கள் செல்வாக்கு பெற்றிருந்த காலம்.



**மதுரை கொண்ட பரகேசரி** இம்மன்னனின் காலத்தைய கல்வெட்டுகள் மொத்தம் 7. அத்தனைக் கல்வெட்டுகளும் விளக்கெரிக்க தானம் கொடுக்கப்பட்ட செய்திகளையே கூறுகின்றன. மொத்தம் 8 விளக்குகள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த விளக்குகள் ஒவ்வொன்றுக்கும் 26 பசுக்கள் அல்லது 25 ஆடுகள் அல்லது 6 எருமைகள் வீதம் தானம் கொடுக்கப்பட்டிருக்கின்றன. தானம் கொடுத்த அனைவரும் சமுதாயத்தில் செல்வாக்கு மிக்க உயர்தர மக்களாகவே காணப்படுகின்றனர்.

ஊத்தூர் கூற்றத்திலுள்ள இழிநத்தூர் என்ற ஊர்த்தலைவன் ஒருவன் தானம் செய்திருக்கிறான். மணிக்கிராமத்து தர்மச்செட்டி என்ற சடையங்கவடன் என்பவன் (வணிகனாக இருக்கலாம்) தானம் செய்திருக்கிறான்.

மூவேந்த பல்லவரையன் என்பவன் அதிகாரியாக இருத்தல் வேண்டும். இவன் சோழ நாட்டுத் திருப்பனங்காட்டு நாட்டு ஆற்றூரைச் சேர்ந்தவன் எனத் தெரிகிறது.

மழநாட்டு வல்லபுரத்து வெள்ளாளன் கோவடி என்பவனும், நக்கனப் பித்திருமூர்த்தி என்ற இருவர் பெயர்களும், பிராந்தகன் உத்தமசீலி என்ற பெண்ணின் பெயரும் காணப்படுகிறது.

முதலாம் ராஜராஜன் ஆட்சிக்காலத்தில் இக்கோயில் பழுது பார்க்கப்பட்டது. அங்கிருந்த வட்டெழுத்துக் கல்வெட்டுகளை இராசராசன் காலத்தில் தமிழ் எழுத்துகள் செல்வாக்கு பெற்றமையால் தமிழாகப் படியெடுத்ததாக இராசராசன் கல்வெட்டு கூறுகிறது. இந்த வட்டெழுத்துக் கல்வெட்டு மாறஞ்சடையனின் கல்வெட்டாகும். இதுவே மிகவும் சிறப்பு வாய்ந்த வரலாற்றுச் செய்தியாகும்.

ராஜராஜசோழன் காலத்தில் ஈழமண்டலத்தைச் சேர்ந்த கோட்டூர் நாட்டிலுள்ள விண்ணந்தை என்ற விக்கிரமபாண்டிய நல்லூரிலுள்ள ஒருவன் நிலதானம் அளித்த செய்தி காணப்படுகிறது.

### திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவல்லபன்

இவன் முதலாம் ராஜராஜன் காலத்தில் வாழ்ந்த பாண்டிய மன்னனாக இருத்தல் வேண்டும். குற்றாலநாத ஆலய வழிபாட்டிற்கு மேலும் சிலர் வேலைக்கு அமர்த்தப்பட்டனர்.

சிவாச்சாரனீஸ்வரமுடையார் கோயிலுக்கு வேலையாள் அதிகம் அமர்த்தப்பட நிலதானம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

முதலாம் ராஜேந்திரசோழன் காலத்தைய கல்வெட்டுகள் நிலங்களும், ஆடுகளும், எருமைகளும் விளக்கெரிக்க தானமாகக் கொடுக்கப்பட்ட செய்திகளைக் கூறுகிறது.

தென்வார நாட்டிலுள்ள பாகூர் என்ற ஊரைச் சேர்ந்த வெள்ளான் தேவன் பட்டமுகன், பல்லவரையர் மனைவி, அரையன் பொதுவியார், கந்தன் இரவை ஆகியோர் தானம் கொடுத்துள்ளனர்.

முதல் பராந்தகன் காலத்திலும் சூரிய கிரகணத்தன்று விளக்கெரிக்க நிலம் தானமாக அளிக்கப்பட்ட செய்தி காணப்படுகிறது.

முதலாம் இராஜேந்திரன் காலத்திலும் கந்தன் இரவை என்பவன் விளக்கெரிக்க நிலம் அளித்துள்ளான்.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருக்குற்றாலத்து ஊர்ச்சபையோர் நெல் விளையும் நிலத்திற்கு மட்டுமே வரி வசூலிக்கப் படவேண்டும் என்று முடிவு செய்யப்பட்ட செய்தி காணப்படுகிறது.

இதே மன்னன் காலத்தில் அந்தணர்களுக்குத் தானமாகக் கொடுக்கப்பட்ட நிலத்திற்கு வரி விதித்து அதே கோயில் தேவதான நிலமாக்கி இருக்கவேண்டும்.



நீலிநல்லூர் என்ற குலசேகர சதுர்வேதிமங்கலம் — ஊற்றப்பன் குறிச்சி என்ற ஊராக மாறியிருக்க வேண்டும். (ARE No. 428/1918)

இம்மன்னவன் காலத்தில் 'சுந்தரபாண்டியன் கோல்' என்றதோர் அளவுகோல் இருந்ததாக இவன் கல்வெட்டு கூறுகிறது. (ARE No. 431/1918)

முதலாம் பராந்தகன் கல்வெட்டு ஒன்றில் 'ஈழக்காசு' குறிப்பிடப்படுகிறது. (ARE No. 443/1917)

### (கி.பி. 13-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 16-ஆம் நூற்றாண்டு வரை)

இந்த காலகட்டங்களில் காணப்படும் கல்வெட்டுகளை 6 பிரிவுகளுள் அடக்கலாம்.

1. சில குறிப்பிட்ட பெயர்களில் விசேஷ பூசைகள் நடத்தப்பெற்றன.
2. இறைவன் முன்னிலையில் வேதம், நால்வர் பாடல்களை வாசிப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.
3. கோயில் நிர்வாகத்திற்கு அதிகாரி அமர்த்தியிருக்கின்றனர்.
4. கோயிலுக்குப் பல தானங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றன.
5. கோயிலுக்குச் சில அடிமைகளும் தரப்பட்டிருக்கிறார்கள்.
6. பிற முக்கிய செய்திகள்.

### 1. விசேஷ பூசைகள்

கி.பி. 1253 — இல் கோயில் நித்திய வழிபாட்டிற்காகச் சிலரை (ஆண்கள்) மன்னவனின் பிறந்த நாளான புரட்டாசி மாதத்தில்

ஜேஷ்ட நாளில் சிறப்பான பூசை வழிபாடுகளை நடத்துவதற்காக வேலைக்கு அமர்த்தப்பட்டனர். மேலும் பாண்டிய மன்னன் வீரபாண்டியன் பிறந்த நாள் புரட்டாசி மாதம் ஜேஷ்ட தினம் என்றும் தெரியவருகிறது.

குலசேகர பாண்டியன் காலத்தில் (13 — ஆம் நூற்றாண்டு) இக்கோயிலில் 'காளாமுகத்தோளான்' சந்தி என்ற பூசை நடத்துவதற்கு சில ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

'பராக்கிரம பாண்டியன் சந்தி' என்ற பூசை செய்வதற்கு 'மேல் அகரம்' என்ற திரிகூடச் சதுர்வேதி மங்கலத்தை நாராயணன் என்பவனுக்கும், மணணிலை நல்லூர் என்ற அவனி முழுதுடைய சதுர்வேதிமங்கலத்தைப் பாடகம் கைலாசநாத பட்டனுக்கும் தானமாக வழங்கிய செய்தி காணப்படுகிறது. இம்மன்னன் காலத்திலும் மேலும் சிலர் கோயில் வழிபாட்டு வேலைக் காரணத்திற்காக வேலையில் அமர்த்தப்பட்டனர்.

## 2. வேதமும், நால்வர் பாடல்களும்

வீரவெண்பாமாலை என்ற பெருமாள் குலசேகரபாண்டியன் காலத்தில் தென்வார நாட்டிலுள்ள இலஞ்சி என்ற ஊரிலுள்ள நிலம் தானமாகக் கோயிலுக்கு அளிக்கப்பட்டது.

இதே மன்னன் காலத்தில் கோயிலில் சிறப்பான நாட்களில் இறைவனுக்கு முன்னிலையில் புராணம் வாசிக்க ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இந்தச் செய்தியை அழகன் பெருமாள் அதிவீரராமன், அதிவீரராமன் பராக்ரமன் ஆகியோர் வாயிலாக அறிவிக்கப்பட்டது.

மேலும் 11 பேர்களுக்குக் கோயிலில் வேதம் (அத்யாயனா) ஓதுவதற்கு நிலதானம் வழங்கப்பட்டது. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் புனிதநூல் (Sacred Thread) அணிந்து வேதம் ஓதப்பட அந்த நிலதானம் வழங்கப்பட்டது. அவ்வாறு வழங்கப்பட்ட ஊர் குத்தாலச் சதுர்வேதிமங்கலமாக இருக்கவேண்டும்.



குலசேகரபாண்டியன் காலத்தில் மெய்கண்ட தேவன் சிந்தாமணி என்பவனுக்கு ஞானசம்பந்தர் பாடல்களையும், பிற பாடல்களையும் பாடுவதற்கு நிலதானம் வழங்கப்பட்ட செய்தியும் காணப்படுகிறது.

வீரவெண்பாமாலை என்ற மன்னன் ஆச்சார்ய சுத்தசாஸ்தன் என்பவனுக்குப் புலியூரைத் தானமாக அளித்திருக்கிறான். எனவே அப்பெயருடையவன் வேதம் ஓதுபவனாக இருக்கலாம்.

ஸ்ரீவல்லபன் காலத்தில் 4 வேதம் ஓதும் 12 பேர்களுக்கு நிலதானம் வழங்கப்பட்ட செய்தியும் காணக்கிடக்கின்றது.

## 3. கோயில் நிர்வாகம்

வீரவெண்பாமாலை என்ற பெருமாள் குலசேகரபாண்டியன் காலத்தில் அடைக்கலங்காத்தான், சோழியதரையன் ஆகியோரைக் கோயில் வேலைகள் நிர்வாகம் செய்வதற்கு அமர்த்தப்பட்ட செய்தி காணப்படுகிறது.

இதே மன்னவன் காலத்தில் கோயில் கணக்குகளை நிர்வகிக்க அழகிய சொக்கன் என்பவனுக்கு நிலமும், பணமும் வழங்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீவல்லபன் காலத்திலும் 'காணியாட்சி' என்ற நிலம் கோயில் கணக்குகளுக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

## 4. கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானங்கள்

இக்கோயிலுக்குப் பல்வகைத் தானங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. இத்தானங்களை இருவகையாகப் பகுக்கலாம்.

1. கோயிலுக்கு மன்னராலும் பிறராலும் அளிக்கப்பட்ட தானங்கள்.
2. கோயில் பணிபுரிவோர்க்கு அளிக்கப்பட்ட தானங்கள்.

1. வீரவெண்பாமாலை குலசேகரன் காலத்தில் தனிப்பட்டவர்கள் (குடிமக்கள்) கோயிலுக்குத் தானமாக நிலங்களை வழங்கினர். மேலும் கோயிலில் விளக்கெரிப்பதற்காக நிலம்

வாங்கப்பட்ட செய்தியும் காணப்படுகிறது. குறிப்பாக இம்மன்னவன் காலத்தில் குலசேகர சக்கரவர்த்தி என்ற வியாபாரி கோயிலுக்கு சில வெள்ளிப் பாத்திரங்கள் வழங்கிய செய்தி மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.

மாறவர்மன் குலசேகரன், ஜடாவர்மன் குலசேகரன் ஆகியோர் காலத்தில் நண்பகல் வழிபாட்டிற்காகக் கோயிலுக்கு நில தானமும், நாச்சியார் குழல்வாய்மொழி மங்கை வழிபாட்டிற்கு நில தானமும் வழங்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீவல்லபன் காலத்தில் கோயிலுக்கு நிலமும் வீடும் தானமாக வழங்கப்பட்டிருக்கிறது.

2. வீரவெண்பாமாலை காலத்தில் வேதம் ஓதுபவர்களுக்கு நில தானம் வழங்கப்பட்டது.

மேலும் ஸ்ரீவல்லபன் காலத்தில் சத்திசிவன் உய்யவந்தான் ஏகநாயகப் பட்டனுக்குப் பூசை நடத்தும் வேலைக்காக 2½ பங்கு நிலம் வழங்கப்பட்ட செய்தியும், 4 வேதம் ஓதும் 12 பேர்களுக்கு நிலதானம் வழங்கப்பட்ட செய்தியும் கிடைக்கிறது.

### 5. அடிமைகள்

வீரவெண்பாமாலை குலசேகரன் (16 — ஆம் நூற்றாண்டு) காலத்தில் கோயிலுக்கு சில ஆண்களும், பெண்களும் தானமாக அளிக்கப்பட்டிருந்தனர் என்ற செய்தியைக் காணும்போது 16 — ஆம் நூற்றாண்டுவரை தமிழகத்தில் 'ஆண்டான் அடிமை' சமுதாய அமைப்பு இருந்தது எனத் தெரிகிறது.

### 6. பிற செய்திகள்

கோயிலுக்கு வழிபாட்டு வேலைக்காக ஆட்கள் அமர்த்தப்பட்டதாக பல கல்வெட்டுகள் காணப்படுகின்றன. பராக்கிரம பாண்டியன் காலத்தில் கௌரி குழல்வாய்மொழி அம்மனுக்கு நித்திய பூசை செய்து வருபவர்களுக்கு நிலமும் வீடும் தானமாகக் கொடுக்கப்பட்டது.



அதுபோல ஸ்ரீவல்லபன் காலத்திலும், வீரபாண்டியன் காலத்திலும் புதிதாக ஆட்கள் அமர்த்தப்பட்டனர்.

அதுமட்டுமன்றி வீரவெண்பாமாலை காலத்தில் கோயில் வேலை செய்பவர்கள் எந்த நேரத்தில் யார் யார் வேலை செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்திருக்கின்றனர். இதிலிருந்து கோயில் வேலைகள் அவர்களுக்குப் பிரித்துத் தரப்பட்டிருந்தது என்பதை அறியமுடிகிறது.

அழகன் பெருமாள் என்ற மன்னன் குற்றாலமுடைய நாயனார் புனித நீராட்டுக்காக, சில நிலங்களின் வரிகளைக் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தான் (தென்னிந்திய கோயிற் சாசனங்கள் Part II Page. 809).



# இலக்கிய வளம்

இயற்கை எழில் கொஞ்சும் குற்றாலம் காண்போரையெல்லாம் கவிஞராக்கிவிடும் கவின்மிகு பூமியல்லவா! "குற்றாலமென்று மரப்பாவை சொன்னாலும் சொல்லுமே பாட்டு" எனும்போது இலக்கியப் புலமையாளர்கள் போற்றிப் புகழ்ந்து பாடவா கேட்கவேண்டும்.

திருஞானசம்பந்தர் திருக்குற்றாலப் பதிகம், திருக்குறும்பலா பதிகம் என இரு பதிகங்கள் பாடியிருப்பதே இதன் சிறப்பிற்குச் சான்றாகிறது. "சங்க இலக்கியத்திற்கடுத்து இயற்கையின் அழகைப் பலவாறு பாடிய சொல்லோவியங்களை அவருடைய தேவாரத்தில் காணலாம்" எனும் கருத்திற்கு அவரது குற்றாலப் பதிகமும், குறும்பலா பதிகமுமே சான்றாகின்றன.

இயற்கையில் தோய்ந்த அவர்தம் கவிச்சிந்தனையை உரைப்படுத்தி காண்பதைக் காட்டிலும் உள்ளவாறே காண்பதில்தான் சுவை மிகுதி என்பதால் அவ்வாறே காணலாம்.

*"வம்பார் குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்*
*கொம்பார்சோலைக் கோலவண்டி யாழ்செய் குற்றாலம்"*
*"செல்வமல்கு செண்பகம் வேங்கை சென்றேறிக்*
*கொல்லைமுல்லை மெல்லரும் பீனுங் குற்றாலம்"*
*"பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின் தேன்*
*கொக்கின்கோட்டுப் பைங்கனி தூங்கும் குற்றாலம்"*
*"மலையார்சாரல் மகவுடன் வந்த மடமந்தி*
*குலையார்வாழைத் தீங்கனி மாந்துங் குற்றாலம்"*



*"மைம்மாநீலக் கண்ணியர் சாரல் மணிவாரிக்*
*கொய்ம்மாஏனல் உண்கிளி ஓப்புங் குற்றாலம்"*
*"நீலநெய்தல் தண்சுனை சூழ்ந்த நீள்சோலைக்*
*கோலமஞ்ஞை பேடையொடாடுங் குற்றாலம்"*
*"போதும் பொன்னும் உந்திஅருவி புடைசூழக்*
*கூதல்மாரி நுண்துளி தூங்குங் குற்றாலம்"*
*"அரவின் வாயின் முள்ளெயிறேய்ப்ப அரும்பீன்று*
*குரவம்பாவை முருகமர் சோலைக் குற்றாலம்"*
*"பெருந்தண்சாரல் வாழ்கிற வண்டு பெடைபுல்கிக்*
*குருந்தம் ஏறிச் செவ்வழி பாடும் குற்றாலம்"*
*"கோடல் ஈன்று கொழுமுனை கூம்புங் குற்றாலம்"*

எனும் இக்கவிதை வரிகளை நெஞ்சில் பதித்துக்கொண்டு குற்றாலத்தைக் காண்போர்க்கு திருஞானசம்பந்தரின் இயற்கையை நோக்கும் கூரியப் பார்வை தெள்ளிதின் புலனாம்.

*"கூதல்மாரி நுண்துளி தூங்கும் குற்றாலம்"* என்பது எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

*"பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்ல புகழ்விம்மக்*
*கொடிகளோடு நாள்விழமல்கு குற்றாலம்"*

என்ற பகுதியால் திருஞானசம்பந்தர் காலத்திலேயே விழாக்கள் சிறப்புற நடந்துள்ளமையை அறியமுடிகிறது.

குறும்பலா பதிகமும் குற்றால இயற்கையைச் சிறப்புற உரைக்கின்றன. குற்றாலநாதர் குடியிருக்கும் இடம் எதுவென்று கேட்டு குற்றால இயற்கையை விளக்கி அவ்விடத்தில் உள்ள குறும்பலா நிழலில் குடியிருக்கிறார் எனக் கூறுவதாக இப்பாடல்கள் அமைந்துள்ளன.

திருஞானசம்பந்தர் குற்றால மலையின் அழகையெல்லாம் அள்ளிப் பருகியதுபோல திருநாவுக்கரசரும், மாணிக்கவாசகரும் குற்றாலத்துறை கூத்தனின் குறைகழல் திறம்பாடியுள்ளனர். இவர்களையன்றி பின்வந்த கபிலதேவர், பட்டினத்தார், அருணகிரியார் போன்ற புலமைத்திறஞ்சால் அடியார்களும் குற்றாலத்தையும், குற்றாலநாதனையும் போற்றிப் பாடியுள்ளனர்.

**திரிகூடராசப்பக் கவிராயரின் நூல்கள்**

திருஞானசம்பந்தர் முதலாக வந்த இறையடியார்களுக்குப் பின்வந்த திரிகூடராசப்பக் கவிராயரின் படைப்புகள் திருக்குற்றாலத்துக்குப் பெருமை சேர்ப்பதில் தலையாய இடத்தைப் பிடித்துள்ளது.

இறைவனைப் பற்றியும், இறைவன் வாழும் தலம் பற்றியும் பக்திப் பனுவல்கள் நமது பூமியில் ஏராளமாக முகிழ்த்துள்ளன. ஆயின் அவற்றில் காலத்தை வெல்லும் திறன் பெற்றவை மிகச் சிலவே.

தலபுராணங்கள் போன்ற பக்திப் பனுவல்கள் பெரும்பான்மையும் இலக்கியச் சுவைஞர்களால் புறக்கணிக்கப்பட்ட இலக்கிய மரபாகிவிட்டது. பழங்கோயில்களின் கட்டடக்கலையும், சிற்பக்கலையும், கல்வெட்டுச் செய்திகளும் பிற்காலத்தில் திருப்பணியாளர்களால் சீரழிக்கப்பட்டதுபோல், நமது அழகிய கலைச்செல்வம் பொலிந்த கோயில்களின் உண்மையான வரலாற்றை இத்தலபுராண ஆசிரியர்களின் புனைக் கதைகள் மூடிமறைத்து விட்டன அல்லது குழப்பிவிட்டன எனலாம்.

குற்றாலநாதர் பற்றிய இலக்கியங்கள் பக்திச் சுவையையும் வென்ற இலக்கியச் சுவையைப் பெற்றமைக்கு இயற்கை வளமே இன்றியமையா ஏதுவெனலாம்.



நூல்களுக்குரிய வனப்பு எட்டு எனத் தொல்காப்பியம் செய்யுளியலில் கூறுகிறது. இவற்றுள் புலன் என்பதும் ஒன்று. செய்யுள் வனப்பில் புலன் என்பது ஒன்று எனவும் பாமர மக்களால் வழங்கும் சொற்களால் ஆக்கப்பட்டு அவர்கள் ஆடியும் பாடியும் வரும் நாடகச் செய்யுளே அதற்கு இலக்கியம் எனவும் தொல்காப்பிய உரையாசிரியர் இளம்பூரணர் கூறுவார். அவர் காலத்துக்கு முன்பே அவ்வகை நூல்கள் பல இருந்தன என்பது தெளியப்படும். பிற்காலத்தில் நாமறிந்த அவ்வகை நூல்கள் பள்ளு, குறவஞ்சி போன்ற பிரபந்தங்கள் போல்வனவே. நமது பூமிக்குரிய பல்வேறு இலக்கிய மரபுகள் ஓலைச்சுவடிகளோடும், தனிமனிதச் சிந்தனைகளோடும் பல மடிந்துவிட்டன.

சிலம்பில் காணப்படும் வேட்டுவ வரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை என்ற பகுதிகளில் உள்ள வரிப்பாடல்களும், வாழ்த்துக் காதையில் உள்ள வரிப்பாடல்களும் முறையே வேட்டுவரும், ஆயரும், குறவரும் பாடி ஆடினார்கள் என்பதாக ஆசிரியர் அமைத்திருக்கிறார். இங்ஙனம் இலக்கியர்களின் இடையே பயன்படுத்தப்பட்ட பாமர இலக்கிய மரபுகள்தான் நமக்குக் கிடைக்கின்றன.

இப்பாமர இலக்கிய மரபுகளில் மனம் பறிகொடுத்த இலக்கியர்களால் எழுந்த இலக்கிய மரபுகளே பள்ளு, குறவஞ்சி, நொண்டி நாடகம் முதலியன.

திரிகூடராசப்பக் கவிராயர் திருக்குற்றால இறைவன் மீது பதினான்கு நூல்கள் எழுதியுள்ளார். இவற்றில் இலக்கியச் சுவைமிக்க குற்றாலக் குறவஞ்சியே அவர்தம் திறனுக்குச் சிகரமாகத் திகழ்கின்றது. ஆகவே அவர்தம் குறவஞ்சியையே முதலில் நோக்கலாம்.

## திருக்குற்றாலக் குறவஞ்சி

### நூல் அமைப்பு

குறவஞ்சி நூல்களில் ஒரு தலைவனோ, கடவுளரோ உலா வர அவரைக் கண்ட பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் ஆகிய எழுவகைப் பருவ மகளிரும் காதலித்துத் தம் உறையுணர்விழந்து நிற்ப, அவருள் எல்லா நலமும் ஒருங்கமைந்த இளநங்கையொருத்தி உலா வந்த தலைவனைக் காதலித்துக் கங்குகரையில்லாது காதல் மயக்கம் கரைபுரண்டோட நிற்பாள். அவளுக்கும் தலைவன் கிட்டாதவனாய் உலாப்போந்து தன் இருக்கை சேர்வதாக முடிப்பர்.

காதலால் உந்தப்பட்டு வருந்தும் நிலையினளாகிய மங்கைக்குக் கைக்குறி பார்த்து அவள் காதலித்த தலைவனே அவட்குக் கணவனாகக் கிட்டுவான் என்று குறத்தி குறிகூறுவதாக அமைத்துக் கூறும் பகுதியே சிறந்தது. ஆதலால் அச்சிறப்புப் பற்றிக் குறவஞ்சி என அப்பெயரால் நூற்குப் பெயரிட்டனர். திருக்குற்றாலநாதரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு குற்றாலச் சிறப்பைப் பாடவந்த நூலே திருக்குற்றாலக் குறவஞ்சி.

குற்றாலக் கோயிலின் வசந்தவீதி பல இடங்களில் சிறப்பாகப் பேசப்படுகிறது. இவ்வசந்த வீதி தேர் கொண்ட வசந்த வீதி.

நன்னகரத் தெருவினிலே, சங்க நெடுவீதி, சங்கணிவீதி, வருசங்க வீதி, சங்க வீதியிற் சங்கம் தோற்றாள், சங்கமறுகின் ஊடே, ஆடல்வளை வீதியிலே என்று வசந்த வீதியும், சங்க வீதியும் சிறப்புறப் பேசப்படுகின்றன.

### விழாக்கள் பூசை பற்றி

நாள்தோறும் திரிகூடநாதருக்குத் திருவனந்தல் முதல் ஏகாந்தம் வரை ஒன்பது கால வழிபாடு உண்டு.



சிறந்த ஏழு திருமுழுக்கு, திருநாட்களில் பங்குனி, புரட்டாசி, மார்கழித் திங்களின் திருவாதிரைத் திருவிழா என்ற மூன்று திருவிழாக்களுடன் சித்திரை மாதம் வசந்த உற்சவமும், மாதவழிச் சிறப்பாகப் பிரதோசம், அமாவாசை, பௌர்ணமிகளும், வருடவழிச் சிறப்பாகக் கார்த்திகை மாதம் பௌத்திர உற்சவமும், ஆடி மாதம் சோதியும், சித்திரைச் சதயமும், புரட்டாசி நவராத்திரியும், வைகாசி மூலம் விசாகமும், தைப்பூசம் முதலியனவும் சிறந்த நாட்களாகப் பேசப்படுகின்றன.

குற்றாலத்துச் சங்கர விசுவநாதன் மகனாகிய சிவராம நம்பியென்னும் குருக்கள், சிறந்த சைவாகமம் ஆகிய மகுடாகம முறைப்படி சடங்குகள் செய்வர் என்ற ஆகம வழிபாட்டுமுறை கூறப்படுகிறது.

பாலானது ஆறாகப் பெருகி ஓடவும், நெய்யானது ஆறாகப் பெருகி ஓடவும், திருமுழுக்கு மிகச் செய்த பின்பு நைவேத்தியம் பணிமாறும் காலத்தையும் ஏற்றுக் கொண்டருளி, நான்கு வேதங்களாகிய பழைய பாடல்களும், திருஞானசம்பந்தர் முதலிய மூவர் பாடியருளிய தேவாரமும், ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நான்கு கவிகளைச் செய்கின்ற புலவர்களது புதுப்பாடல்களும், திருநீலகண்டராகிய திருக்குற்றாலநாதர் ஏற்றுக்கொண்டருளி நிறைந்திருக்கும் திருக்கோயிலில் இன்னவர் செல்லலாம் இன்னவர் செல்லக்கூடாது என்று தடை ஒன்றும் இல்லை. யாவரும் போகலாம். அப்பொழுது திருக்குற்றாலநாதர் தம் தேவியாகிய குழல்வாய்மொழி அம்மையாருடன் வீற்றிருப்பார். நம் விருப்பமாகிய குறைகளை எடுத்துரைக்கக்கூடாது.

காலை, மாலை, உச்சி மாலையாகிய மூன்று காலத்தும் திருக்குற்றாலநாதர் திருவுருவாகிய இலிங்க வடிவத்தைத் தொட்டு பணிபுரிகின்றவரான ஆதிசைவக் குருக்கள்மார் வந்து நின்று

பணிபுரிகின்ற திருவனந்தல் (பள்ளியெழுச்சி) முதலாக, கொப்பணி அணிந்த அழகுடன் காதணியின் அழகுங் கொண்ட குழல்வாய்மொழியம்மையினது பள்ளியறைவரை திருக்குற்றாலநாதர் கோயிலுக்குள் செல்கின்ற தனிநேரமாகும். அந்த நேரத்திலேயே நமது வேண்டுதல்களை வெளியிடவேண்டும் முதலிய கருத்துக்களை உள்ளடக்கிய குற்றாலக் குறவஞ்சியின் சிறப்புக்கு அது கூறும் இயற்கை வர்ணனைகளே காரணம். நாட்டு வளம், மலை வளம், நீர் வளம், கோயில் வளம், சித்திரச்சபைச் சிறப்பு, குறவன் குறத்தி ஏசல், பூசல் அனைத்தும் படித்து மகிழத்தக்கன. கீழ்க்காணும் சில பாடல்களின் மூலம் குற்றாலக் குறவஞ்சியின் முழுக் கவிச்சிறப்பை உணரலாம்.

**இயற்கை வளம்**

*"சைவமுத் திரையை வானின்மேல் தரிக்குந்*
*தெய்வமுத் தலைசேர் திரிகூட* ***மலையான்***
*வான்புனல் குதட்டும் மடக்குரு கினுக்குத்*
*தேன்புரை ஏறுஞ் சித்ரா* ***நதியான்***
*ஏரிநீர் செழிக்க வாரிநீர் கொழிக்கும்*
*மாரிநீர் வளர்தென் ஆரிய* ***நாட்டான்***
*கன்னிமாப் பழுத்துக் கதலிதேன் கொழித்துச்*
*செந்நெல்காத் தளிக்கும் நல்நகர்ப்* ***பதியான்****"*

என மலை வளமும், நதி வளமும், நாட்டு வளமும், ஊர் வளமும் சுருக்கமாய் சொல்லப்படினும் பின்னர் இயற்கை வளம் சிறப்பாகப் பேசப்படுகிறது.

**மலை வளம்**

*"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்*
*மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்*
*கானவர்கள் விழிஎறிந்து வானவரை அழைப்பார்*
*கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்*



*தேனருவித் திரையெழும்பி வானின்வழி ஒழுகும்*
*செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்*
*கூனலிளம் பிறைமுடித்த வேணிஅலங் காரர்*
*குற்றாலத் திரிகூட மலைஎங்கள் மலையே"*

எனும் சிறப்புமிகு பாடலும், மேலும் ஐந்து பாடல்களும் குற்றால மலைவளம் பற்றி சிறப்புறப் பேசுகின்றன.

*"கூழமேதி இறங்குந் துறையிற்*
*சொரியும் பாலைப்பருகிய வாளை*
*கூழைவாசப் பலாவினிற் பாயக்*
*கொழும்ப லாக்கனி வாழையிற்சாய*
*வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க*
*வருவிருந்துக் குபசாரிப் பார்போல்*
*தாழை சோறிட வாழை குருத்திடும்*
*சந்த்ர சூடர் தென் ஆரிய நாடே"*

**தல மகிமை**

மெய்யுணர்வுடையார்கூடச் சித்திர நதி தோன்றிய வரலாற்றை அறியமாட்டார்கள். உயர்வுபெற்ற திரிகூடத்திலுள்ள தேனருவித் துறையிடத்தே ஒரு சிவலிங்கம் தேவர்கட்கு மட்டும் அறிந்த மறைபொருளாய்த் தோன்றா நின்றது. அத்தகைய தேனருவித் துறையை அயன் உரைத்த இடம் இன்னதென்று அறியாமல் அரிய தவஞ்செய்ததற்காகத் தேடி அலைகின்ற காலத்தில், மௌன நிலை எய்திய தேவர்கட்கு வேடர்கள் இஃதென்று காட்டிக் கொடுத்த பழைய கங்கையாறே இப்போது சிவமது கங்கையாக வழங்கப் பெறுகிறது.

**வரலாற்றுச் செய்தி**

திரிகூடராசப்பக் கவிராயரை ஆதரித்துப் புரந்து வந்தவர்கள் சொக்கம்பட்டிக் குறுநில மன்னர் சின்னணைஞ்சாத் தேவரும்

ஒருவராவர். அவரை தம் நூலில் ஏற்ற இடங்களில் போற்றிப் புகழ்ந்து தம் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொண்டுள்ளார். இதனால் நமக்கு வரலாற்றுச் செய்திகளும் கிடைக்கின்றன.

கொல்லம் 887 — ஆம் (கி.பி. 1711) ஆண்டில் பதஞ்சலி மாமுனிவர் போற்றத் தமிழை வளர்த்த பாண்டியன் முதலிலே சிறிய கூரை ஓடுகள் கொண்டு வேய்ந்த (மூடிய) அழகுமிகு சித்திர சபையைச் சின்னணைஞ்சாத் தேவன் செம்பாலான ஓடுகள் கொண்டு வேய்ந்தான்.

வடகீழ்திசையில் கொல்லம் 444 — ஆவது (கி.பி. 1268) ஆண்டில் தென்காசிக் கோயில் சிறந்து மேம்படும்படி செண்பக பாண்டியனிடத்தில் அன்பாய் குறி சொன்னவர்கள் குறவர் குலத்திற் பிறந்த குறிகாரர்கள் என்றும் சொல்லப்படுகிறது.

படைத்தலைவனாகிய வைத்தியப்பன் என்பவன் பெற்ற சைவ சமய முதல்வனும், சேனைச் சவரிப்பெருமாளின் பின் பிறந்தவனும், செல்வனுமான மருதூரில் வாழ்கின்ற வைத்தியப்பன் என்பவனுடன் பெருமையுடையவனாகிய குற்றாலநாதன் என்பவனைப் பெற்ற தந்தையும், கொடையில் சிறந்தவனுமான பிச்சைப் பிள்ளையுடைய வயல்களில் எல்லாம் காட்டுக் குளத்தின் உட்கிடையான கீழை புகுக் குளத்துக் கற்பூரக்கால் பற்று என்னும் வயல்கள், தட்டாங்குளச் சுற்று என்னும் வயல்கள்.

அரசனான சொக்கம்பட்டி சின்னணைஞ்சேந்திரனுடைய வடகரை வீட்டுக்கு மந்திரியாகவும், செந்நெல் விளைகிற மருதூருக்குத் தலைவனாகவும், தென்காசி நகருக்குத் தாய் பிறந்த இடம் போலவும், தன்னை வளர்க்கின்ற குற்றாலநாதர் திருநகராகிய திருக்குற்றால நகரை மேம்படச் செய்கின்ற செயலாளனாகவும், திருக்குற்றாலத்து அந்தாதி பாடிய புலவரான பகைவரும் வணங்கும் பிச்சைப்பிள்ளையுடைய வயல்கள்.



## திருக்குற்றாலத் தலபுராணம்

தலபுராணத்தில், கோயிற் பணிமக்கள் நாட்டு வளம் முதலான பல செய்திகள் கூறப்பட்டுள்ளன. குறவஞ்சியில் உள்ள இயற்கைத் தன்மை இதில் காண இயலவில்லை. முந்தைய பெருங்காப்பியங்களைப் போல திருநாட்டுச் சருக்கம், திருநகரச் சருக்கம் என சருக்கமுறை பின்பற்றப்பட்டுள்ளது.

ஆற்றுவளம், வயல் வனம் நாற்று நடவில் குரவை பாடுதல், நெல் விளைவு, நெல் பகிர்வு, திணை நிலைப் பொருநகர் வளம், திங்கள் மும்மாரி பொழிவு போன்ற வர்ணனைகளோடு கோயில் சிறப்புகள் கூறப்பட்டுள்ளன.

"திங்கள்தொறும் மும்மாரி பூமாரி தரும் அருவி" எனக் கூறுகிறது. "சாறெலாம் வளர்க்கும் வீதி தமிழெலாம் வளர்க்கும் மன்றம்" "இயல் இசை கொழிக்கும் சங்கம்" "விழவறாவசந்தவீதி" "பாவினில் பயனில் சொல்லில் பண்ணில் பயிலுந்தோறும் நாவினுக் கினியதான நகர்" என்றெல்லாம் குற்றாலத் தலபுராணம் குற்றாலம் பற்றி இலக்கியச் சுவையோடு போற்றிப் புகழினும் இயல்பான குற்றாலம் பற்றி குறவஞ்சியில் அறிவதுபோல் இதில் அறிய இயலவில்லை.

## குற்றாலக் கோவை

இயற்றியவர் ஓர் அரைகுறையான ஏட்டின் புற இதழில் திரிகூடபதி ஆதிக்கியத்தைச் சேர்ந்த தாதம்பட்டி ஒடுக்கத்து அருணாசல சுவாமிகளாற் செய்யப்பட்டது எனக் காண்கிறது என்கிறது நூலாசிரியர் வரலாறு. திரிகூடராசப்பக் கவிராயர் இயற்றியதாகக் கூறப்படும் கோவை தேடுதற்குரியது என்கிறது அதே பகுதி. இந்நூல் ஆசிரியர் காலம் கி.பி. 1768 என்கிறது இதில் உள்ள செய்யுள். கைக்கிளை, களவியல், வரைவியல், கற்பியல் என 451 பாடல்கள் கொண்ட நூல். இதனுள் தீர்த்தங்கள், திருவீதி, மலை, அருவிகள், மரங்கள் சபைகள் நன்னகர் அழகு விரிவாகப் பேசப்பட்டுள்ளன.

## திருக்குற்றால யமகவந்தாதி

திரிகூடராசப்பக் கவிராயர் எழுதிய நூல்களுள் ஒன்று திருக்குற்றால யமகவந்தாதி. இதில் மொத்தம் நூறு பாடல்கள் உள்ளன. குற்றாலநாதரைப் பல்வேறு புராணக்கதைகளோடு புகழ்ந்து பாடுவது, அதன்வழி அவனடி நினைத்தார்க்கு உய்ந்திடும் வழிகாட்டுவதாகக் கூறப்படுவது, இதன் முழு நோக்கம். வாழ்வின் அச்சங்களைக் காட்டி இறைவனை நினைக்கச் செய்வதேயாகும்.

## திருக்குற்றால சிலேடை வெண்பா

திரிகூடராசப்பக் கவிராயர் இயற்றியதே மொத்தம் 50 பாடல்கள் சிலேடை அமைப்பில் புராணக்கதைகளைக் கொண்டு இறைவனைப் புகழும் நூல்.

## திருக்குற்றாலநாதர் உலா

இந்த உலா இத்தலத்தில் உள்ள திருக்குற்றாலநாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு தலப்பெருமை, சிவன் பெருமை, அகத்தியர் வரவு, திருமால் சிவபிரானாதல், திருவிழா, திருக்கோலம், அபிடேகம், ஆபரணம், உடன் வருவோர், வாத்தியம், சின்னம், குழாங்கள், நயம்பட நவிலும் கண்ணிகள் 557, காப்புச் செய்யுள் 3, வாழ்த்துச் செய்யுள் 1 கொண்டது.

## திருக்குற்றால மாலை

கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர். பக்தியை வெளிப்படுத்தும் அருமையான நூல். பாடல்கள் எளிய நடையில் உள்ளன.

## திருக்குற்றால ஊடல்

கோயிலார் வெளியிட்டிருக்கின்றனர். 20 பாடல்கள் கொண்ட நகைச்சுவையுள்ள ஒரு சிறிய நூல். இறைவியும் இறைவனும்



ஒருவரையொருவர் குறைகூறி எள்ளி நகையாடி விளையாடுகின்றனர். புராணக் குறிப்புகள் வாயிலாக இறைவன் இறைவி தன்மைகளைச் சித்தரிக்கும் நூல்.

## திருக்குற்றாலப் பரம்பொருள் மாலை

கோயிலார் வெளியிட்டுள்ளார்கள். குழல்வாய்மொழி கலிப்பா, கோமள மாலை, வெண்பா வந்தாதி, பிள்ளைத்தமிழ், நன்னகர் வெண்பா இவை வெளியிடப்படவில்லை. பிரதிகள் கிட்டவில்லை.

## சித்திரசபைத் திருவிருத்தம்

திருவாவடுதுறை ஆதீனத்துத் தொட்டிக்கலை மதுரகவி சுப்பிரமணிய முனிவர் இயற்றியது. தலபுராணப் பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது. திருவாவடுதுறை ஆதீன மகா சந்நிதானங்கள் வருடந்தோறும் ஐப்பசி மாதத்திற் காலையில் காவேரி நதியில் நீராடி மீண்டு வருங்காலத்தில் இவ்விருத்தங்களை ஓதி வருகின்ற வழக்கமிருந்தது.

## திரிகூடக் கலம்பகம்

இந்நூலிலிருந்து ஒரு பாடல் திருக்குற்றால யமகவந்தாதி *1939* — ஆம் பதிப்பில் சுட்டப்பட்டுள்ளது.



# திருவிழாக்களும் பூசைகளும்

அருள்மிகு திருக்குற்றாலநாதர் திருக்கோயிலின் நாள் வழிபாட்டு முறைகள்

1. திருவனந்தல்
2. உதயமார்த்தாண்டம்
3. விளா பூசை
4. சிறுகாலைச்சந்தி
5. காலைச்சந்தி
6. உச்சிக்கால பூசை
7. சாயரட்சை காலம்
8. அர்த்தசாமம்

என எண்வகைப் பகுப்பில் செவ்வனே நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு வழிபாட்டின் முறைமைப் பற்றியும் இனி விளக்கமாகக் காணலாம்.

விடிவேளை ஐந்து மணியளவில் திருச்சங்கு ஊத, மேளவாத்தியங்கள் முழங்க ஆலய திருக்கதவுகள் திறக்கப்படுகின்றன.

## 1. திருவனந்தல்

அ. அதிகாலை 5.30 மணியளவில் பள்ளியறை திறக்கப்படும்.

ஆ. பின்பு குற்றாலநாதருக்கும் குழல்வாய்மொழியம்மைக்கும் நைவேத்தியம் செய்து, கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

இ. இரவில் சார்த்திய மலரில் சிறிது எடுத்து அம்மையின் சிரசில் வைத்து கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

ஈ. பின்பு அங்கிருந்து சொக்கரை சிவன் கோயிலுக்குக் கொண்டு வருதல்



உ. வந்து சேர்ந்த பின் இறைவர்க்கு கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

## 2. உதயமார்த்தாண்டம்

அ. கதிரவனுக்கு நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

ஆ. அடுத்து துவாரபாலகர், நந்தி முதலியோர்க்கு நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

இ. அனுக்க விநாயகர்க்கு நைவேத்யம் செய்து கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

ஈ. நடராசர்க்கு நைவேத்யம் செய்து, கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

உ. கருவறையில் சுவாமிக்கு நைவேத்தியம் செய்து, பஞ்ச உபசார தீபாராதனை காட்டப்படும்.

ஊ. உற்சவமூர்த்திக்கு நைவேத்தியம் செய்து, கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

எ. அம்மைக்கு நைவேத்தியம் செய்து பஞ்ச உபசார தீபாராதனை காட்டப்படும்.

ஏ. பராசக்திக்கு நைவேத்தியம் செய்து, கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

## 3. விளா பூசை

அ. அனுக்க விநாயகர்க்கு நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை காட்டப்படும்.

ஆ. நடராசர்க்கு நைவேத்தியம் செய்து கற்பூர தீபாராதனை நடைபெறும்.

இ. குற்றாலநாதர்க்கு நைவேத்தியம் செய்து பஞ்ச உபசார தீபாராதனை நடைபெறும்.

